# காசிப் பதியும் கங்கை நதியும்





பேராசிரியர்
சொ.சொ.மீ. சுந்தரம்

# காசிப் பதியும் கங்கை நதியும்

---

பேராசிரியர்

**சொ.சொ.மீ. சுந்தரம்,** M.Com. M.Phil.,

முதல் பதிப்பு 2004

இந்நூல் கிடைக்கும் இடங்கள்

**ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம்,**

(GODOWLIA) குதோலியா, வாரணாசி - 2201002

**ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டைச் சத்திர மேலாண்மைக் கழகம்**

5, மேல வடம்போக்கித் தெரு,

(நகரச் சிவன் கோவிலுக்கு அருகில்)

காரைக்குடி - 630 001

**விநாயகா ஸ்கிரீன்ஸ்** (ஆப்செட் பிரிண்டர்ஸ்)

[illegible] எஸ்.காலனி, மதுரை - 625 010.

[illegible] 0452 - 2600300, 2602490

# முன்னுரை

"ஏழு பிறவிகளில் காசிக்குப் போக வேண்டும் என்று நினைத்தால், அந்த நினைப்பின் பலனாக எட்டாவது பிறவியில் காசியாத்திரை செய்யலாம்" என்பது சான்றோர் வாக்கு. நான் எத்தனை பிறவிகளில் இறைவனாகிய காசி விசுவநாதப் பெருமானை நினைத்தேனோ – என்னைப் பணிகொண்டு, இப்பிறவியில் காசியையும் கங்கையையும் பற்றி எழுத வைத்திருக்கிறான்.

நமசிவாயத்தையும் காசியையும் பிரிக்க முடியாது. நாட்டுக்கோட்டை நகரத்தார்களையும் காசியையும் பிரிக்க முடியாது. ஏறத்தாழ 192 ஆண்டுகளுக்கும் மேலாகக் காசி விசுவநாதருக்கு மூன்று வேளை வழிபாடு செய்யும் பெரும்பேற்றை முன்புசெய் தவத்தின் ஈட்டத்தால் பெற்றவர்கள் நகரத்தார்கள்.

இப்பணிக்காகவே 1863ல் கட்டப்பட்டது காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திரம். இச்சத்திரத்தின் நிர்வாகம் காசிநாட்டுக் கோட்டை நகரச்சத்திர மேலாண்மைக்குழுவிடம் உள்ளது. இக்குழுவின் தலைவரும், அறப்பணிகளில் பெரும் ஈடுபாடு கொண்டவரும், சிறந்த மருத்துவரும் ஆகிய கோட்டையூர் டாக்டர் எம்.ஆர். முத்தையா அவர்கள், இந்த ஆண்டு தீபாவளிக்கு முன் காசியையும் கங்கையையும் நகரச் சத்திரத்தையும் பற்றி விவரமாக ஒரு நூல் வெளிவர வேண்டும் என்று விரும்பி, இப்பணியைத் தகுதி சிறிதுமற்ற என்னிடம் ஒப்படைத்தார்கள்.

எனக்குத் தகுதியில்லை என்பது இரண்டு பேர்களுக்குத் தெரியும். ஒன்று எனக்குத் தெரியும். இரண்டாவதாக என்னுள் இருந்து என்னை வாழ்விக்கும் எம்பிரான் காசி விசுவநாதனுக்குத் தெரியும். அவன் பொறுப்பெடுத்துக்கொண்டு என்னைப் பெயர் போட வைத்திருக்கிறான். இது அவன் போட்ட பிச்சை.

பாவலரும் நாவலரும் பண்மலரக் கண்மலரும்

காவலரும் ஏடவிழ்க்கும் காசியே – தீவளரும்

சுஞ்சக் கரத்தான் கலைமறைக்கு நாயகமாம்

அஞ்சக் கரத்தான் அகம்

என்று குமரகுருபரர் காசிக்கலம்பகத்தில் பாடுகிறார். காசி, சிவபெருமான் வீடு. அங்கே அன்னபூரணி அரசாட்சி செய்கிறாள். கங்கை, கருணை மழை பொழிகிறாள். சுறைக்கண்டன் நம்மைக் கடைத்தேற்றுகிறான். இந்நூலைப் படிப்பவர்களுக்கு ஒருமுறையாவது காசிக்குச் சென்று விசுவநாதரை வணங்க வேண்டும் என்ற எண்ணம் வந்தால் போதும்.

இப்பணியில் என்னை ஈடுபடுத்திய டாக்டர் எம்.ஆர். முத்தையா அவர்களுக்கு என் நன்றி. இந்நூல் எழுதப் பெருந்துணையாக இருந்தது ஸ்ரீகாசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திர நூற்றாண்டு விழாமலர்.1963ல் சென்னையில் பவளக்காரத்தெருவில் ரெங்கோன் நகர விடுதியில் இந்த மலரின் ஆசிரியர், உலகம் சுற்றிய தமிழர் சோமலெ. அவர்கள். என்பால் கொண்ட அன்பால், இந்த மலரை எனக்குத் தந்தார்கள். அந்த இமயமலைக்கு இந்தக் கூழாங்கல் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

எனக்குத் துணை செய்த மற்றொரு மலர், 1999ல் காசியில் நிகழ்ந்த விசாலாட்சியம்மன் கோவில் குடநீராட்டு விழாவில் வெளியிடப்பட்ட மலர். தேவகோட்டையைச் சேர்ந்தவரும், மதுரைத்தியாகராசர் கல்லூரி முதல்வரும், அருட்பாவில் தோய்ந்தவரும், ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோருமாகிய செம்மல் சுப. அண்ணாமலை அவர்களும், அவருடைய சம்பந்தியும் அப்பொழுது காசிச் சத்திர மேலாண்மைக்கழகத் துணைச்செயலாளரும் ஆகிய லெ.மு.மு. முத்துமாணிக்கம் அவர்களும் இம்மலரின் பதிப்பாசிரியர்கள். இப்பெருமக்களுக்கு என் நன்றி.

விசுவாதப் பெருமானுக்குக் கற்கோயில் கட்ட முடியாமல் சொற்கோயில் கட்டியிருக்கிறேன். அப்பெருமான் இச் சொற்கோயிலுக்குத் திருக்குட நன்னீராட்டுச் செய்வது போல முதல்வர் சுப. அண்ணாமலை அவர்களாக மாறி அணிந்துரை வழங்கியிருக்கிறான். உள்ளே இருக்கும் பெருமானுக்கும் உயர்ந்த சான்றோர் அண்ணாமலையாருக்கும் என் வணக்கங்கள்.

இந்நூலை மிகக்குறுகிய காலத்தில் மிகச் சிறப்பாக அச்சிட்டளித்த விநாயகா ஸ்கிரீன்ஸ் உரிமையாளர், அன்புத்தம்பி லெக்ஷ்மிநாராயணன் அவர்களுக்கும் என் அன்பான நன்றி.

அவனருளால், அவன்தாள் வணங்கி, அவன் எழுதவைத்த இந்நூலை அவன் திருவடிகளில் வைத்து வழிபடுகிறேன். அவன் அடியார்கள், அவன் தரும் திருநீற்றுப் பிரசாதமாக இதை ஏற்றுக் கொள்ளட்டும்.

– பணிவுள்ள

**சொ. சொ. மீ. சுந்தரம்**

20, வடுகக்காவல்கூடத்தெரு,
மதுரை – 625 001
29–10–2004

# முகவுரை

நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் புகழும் பெருமையும் பாரதநாட்டு மக்கள் எல்லோருடைய மனங்களிலும் இருப்பதற்கு அடிப்படைக் காரணம் சோதிர்லிங்கத் தலங்களில் முதலாவதாகத் திகழும் காசி விசுவநாதப் பெருமான் திருக்கோவில் மூன்று காலப் பூஜைகளை முறையாக, தொடர்ந்து செய்து வருவதுதான். இது இறைவன் நமக்குக் கொடுத்த வரம். வாழையடி வாழையாக இந்தப்பணி வளர வேண்டும்.

காசி நகரச் சத்திரத்துக்கு ஆண்டு முழுவதும் தலயாத்திரைப் பயணிகள் வந்து கொண்டிருக்கிறார்கள். இவர்களுக்குக் காசியைப்பற்றியும் கங்கையைப் பற்றியும், ஆலயவழிபாடு பற்றியும், நகரச் சத்திரம் செய்துவரும் பணிகளைப்பற்றியும் எல்லா விவரங்களும் அடங்கிய ஒரு நூல் வெளிவர வேண்டும் என்று என் மனம் நினைத்தது. விசுவநாதப் பெருமானை வேண்டினேன். ஒரு மாதத்துக்குள் சிந்தனையைச் செயலாக்கி வைத்த பெருமை சிவபெருமானையே சேரும்.

இப்பணிக்குச் சிவபெருமான் தேர்ந்தெடுத்த கருவி பேராசிரியர் சொ.சொ. மீ. சுந்தரம். இவர்

நல்ல கவிவலவன் நம்பனுறை செம்மனத்தன்

வெல்லத் தமிழ்சுவைநா வீறாளன் – சொல்லரிய

மெய்யுணர்வு நன்குடைய மீனாட்சி சுந்தரன்

தெய்வ அருள் பெற்றுயர்க தேர்ந்து

என்று கம்பனடிப்பொடி கணேசன் அவர்களால் பாராட்டப்பெற்றவர்.

பொற்கிழிப் பரிசும் புலமையும் பெற்றவர்; வணிகப்படிப்பும் வண்டமிழ் அறிவும் உள்ளவர். காலத்தைக் குறைவாக எடுத்துக்கொண்டு காசியையும் கங்கையையும் தமிழால் அளந்து இந்நூலை இயற்றிய பேராசிரியருக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலுக்குச் சிறப்பாக அணிந்துரை வழங்கியுள்ள பெருந்தமிழறிஞர் செம்மல் சுப. அண்ணாமலை ஐயா அவர்களுக்கு என் பணிவான நன்றி.

இதைச் சிறப்பாக அச்சிட்ட விநாயகா ஸ்கிரீன்ஸ் நிறுவனத்துக்கு நன்றி.

விளம்பரம் தந்து உதவிய கோயம்புத்தூர் சௌத் இந்தியா கார்ப்பரேஷன், மதுரை ஸ்ரீ முருகன் டிராவல் ஏஜென்ஸி, ஜே.எம். ஜுவல்லர்ஸ் ஆகிய நிறுவனங்களுக்கும் என் நன்றி உரித்தாகிறது.

காசிப்பதியும் கங்கை நதியும் உங்கள் கரங்களில் தவழ்கின்றன. படித்துவிட்டுக் காசிக்கு வந்து பாருங்கள். நகரச்சத்திரமும் நகரத்தார் பெருமக்களும் ஆண்டவன் பணியையும் அடியார்கள் பணியையும் தொடர்ந்து செய்யத் துணைபுரியுங்கள்.

அன்புள்ள

**MR. முத்தையா**

*தலைவர், ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திர மேலாண்மைக் கழகம், காரைக்குடி*

மதுரை தியாகராசர் கல்லூரி (முன்னாள்) முதல்வர், தமிழாகரர், செம்மல்,
முனைவர் **சுப. அண்ணாமலை** அவர்கள் அன்புடன் வழங்கிய

# அணிந்துரை

வாரணாசி என்னும் காசிப்பதியின் விளக்கமும், வளம்பெருக்கும் கங்கைப் பேராற்றின் பெருமையும், சொக்க வைக்கும் தமிழ்நடைக்குச் சொந்தக்காரர், பொற்கிழிக் கவிஞர் திரு. சொ.சொ.மீ. சுந்தரம் அவர்களால் இந்நூலில் தரப் பெறுகின்றன. வடநாட்டுச் சிவத்தலங்களுக்குப் புனிதப் பயணம் மேற்கொள்வோர், பையில் வைத்துக் கையில் ஏந்தி, அத்தலங்களைப் பற்றி நன்கறிந்து, பயணத்தை முழுமையாக நிறைவு செய்வதற்கு உதவும் நூல் இது.

இதனைப் படிக்கும்பொழுது, ஒரு வழித்துணை ஏட்டினைப் படிக்கும் உணர்ச்சி தோன்றவில்லை. ஓர் அழகிய இலக்கியத்தைப் படிப்பதுபோல் தோன்றிற்று. இதில் கூறப்படும் செய்திகளும் சிறப்பு. எழுதும் மொழிநடையும் சிறப்பு.

பாரதம் என்னும் திருக்கோயிலில் ஸ்ரீகாசி என்ற பொற்கலசத்திற்கு, நகரத்தார்கள் அபிடேகத்திருப்பணி, அன்னசத்திரத் திருப்பணி என்ற வயிரப் பொட்டிட்டு, நாடெங்கும் துலங்க வைத்தார்கள். "அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய்" விளங்கும் பெருமானுக்கு – அண்ட பிண்ட சராசரங்கள் அனைத்திற்கும் அகமும் புறமுமாய்த் திகழும் பரம்பொருளாம் விசுவநாதப் பெருமானுக்கு – சென்ற 1811 ஆம் ஆண்டு முதல், இன்று வரை, நாள்தோறும் மூன்று கால பூசை நகரத்தார்களால் நடத்தப் பெற்று வருதல், இம்மரபினர் பெற்ற பெரும் பேறு. இது மன்னர்க்கு முடிசூட்டும் "மகுடதனவைசியர்" என்ற புகழைவிடப் பெரும் புகழன்றோ ?

திருக்கோயிலில் இறைவனுக்குச் செய்யும் அபிடேகத்தை ஒத்ததே மாந்தரின் பசிதீர்த்தல் ஆகும். அதிலும் மொழிபெயர் தேயமாகிய வடநாட்டுத் தலங்களுக்குப் போக்குவரத்து வசதிகள் ஏதும் இல்லாத காலத்தில் காலால் நடந்தும், வண்டிகளைப் பயன்படுத்தியும், நெடுந்தொலைவு, கடும்பயணம் மேற்கொள்வோர், தலங்களில் வசதியாகத் தங்கவும், வேற்றுமொழி பேசும் மக்களிடையே உணவுக்கு வருந்தாமல், தமக்கு வேண்டிய உணவினைப் பெறவும் சத்திரம் அமைத்து உணவு வழங்குவது மிகப்பெரிய அறமாகும்.

நகரத்தார்கள், ஸ்ரீ காசியில் இறைவனுக்கு அபிடேகப் பணி தொடங்கிய நாளிலேயே, ஏழைகளுக்கு அமுது படைக்கும் அறப்பணியையும் தொடங்கினார்கள். 1863 ஆம் ஆண்டு காசி நகரச்சத்திரம் கட்டப்பட்டதும்,

விசுவநாதருக்குரிய மூன்று கால வழிபாடும், புனிதப் பயணிகளுக்கு அன்னதானமும், அங்கிருந்தே செய்யப் பெற்று வருகின்றன. இன்று வரை ஒரு நாளேனும் ஒரு வேளையேனும் இடைவிடாமல் செய்யப்பட்டு வருகின்றன.

காசியில் மட்டுமன்றி, நகரத்தார்கள் பிரயாகை, அயோத்தி, கயா முதலிய எட்டு இடங்களிலும் சத்திரம் அமைத்து, அறப்பணியாற்றி வருகிறார்கள் என்ற செய்தியும், அத்தலங்களைப் பற்றிய விளக்கமும் இந்நூலில் அழகுற இடம் பெறுகின்றன.

முதலில் காசிப் பதியின் பெருமையைப் புராணம், இலக்கியம் ஆகியவற்றின் துணையோடு எடுத்தியம்பும் ஆசிரியர், அத்தலம் சாவையே சாகவைத்து, அமுத நிலையை அள்ளித்தரும் மயானம் என்றும், இந்த அமுதை அன்னபூரணி அம்மை அளிக்கிறாள் என்றும் எழுதுவது நம் உள்ளத்திற்கு விம்மிதம் ஊட்டுகிறது. காசியில் வாழ்ந்த மகான்களைப் பற்றி அரிய குறிப்புகள் தரப்படுவது இந்நூலின் தனிச் சிறப்பாகும். குமரகுருபரர் பாடிய காசிக் கலம்பகத்திலிருந்தும் அதிவீர ராம பாண்டியர் பாடிய காசிக் கண்டத்திலிருந்தும் அழகிய பாடல்களை இந்நூலாசிரியர் எடுத்துக் காட்டி, அவற்றில் கூறப்படும் காசியின் பெருமையை விளக்குகின்றார்.

காசி என்றால் விசுவநாதரும் கங்கையும் தான் எல்லோருக்கும் நினைவு வரும். ஆனால் இவற்றுடன் சேர்த்துக் காசியில் பார்க்க வேண்டிய பத்துப் புனிதமான இடங்கள் உள்ளன என்பதைப் பயணிகளுக்கு இந்த ஆசிரியர் எடுத்துக் கூறுகிறார்.

தமிழ் இலக்கியங்கள் கங்கைப் பேராற்றை, எங்ஙனமெல்லாம் சிறப்பிக்கின்றன என்பதை எடுத்துக்காட்டுகிறார்.

இந்நூலாசிரியருக்குக் கம்ப ராமாயணத்தில் தனி ஈடுபாடு உண்டு. ஆகவே, காசிக்கு அருகில் உள்ள திருத் தலங்களில், அயோத்தியைப் பற்றிக் கூறும்பொழுது, கம்ப தாசராகவே மாறி விடுகிறார். அயோத்தியில் பெருகி வளம் செய்யும் சரயுநதியைக் குறிப்பிடும்பொழுது

பளிங்கு போன்ற நீர், பரமன் அளைந்த நீர்
திருமகள் வந்து மருமகள் ஆகத்
திருப்பாற் கடலே சரயுவாய் மாற
வானமும் வையமும் வளர்புகழ் பரவ
மகிழ்ச்சியில் ஓடித் திளைப்பவள் சரயு.

என்று கவிதையே பாடி விடுகிறார்.

காசி நகரச் சத்திரத்தின் மேலாண்மைக் கழகம் தோன்றி வளர்ந்த வரலாற்றையும், வடநாட்டில் நகரத்தார்கள் கட்டிய சத்திரங்கள் இம் மேலாண்மைக் குழுவின் ஆட்சியிலிருந்து வருவதைப் பற்றியும், இம் மேலாண்மைக் குழுவினரால் சத்திரங்கள் அவ்வப்பொழுது புதுப்பிக்கப்பட்டு, அவற்றின் அறப்பணிகள் தொடர்ந்து வருவதைப் பற்றியும் கூறும் நூலாசிரியர், நகரத்தார்களின் முன்னோர் தொலைநோக்கோடு செய்துவைத்த இந்த அறப்பணிகள் நூறாண்டுகளுக்கு முன் பர்மாவிலும் பிற வெளிநாடுகளிலும், கல்கத்தாவிலும் இருந்த நகரத்தார்கள் பெருமுயற்சி செய்து தொண்டுள்ளத்தோடு, மிக்க நேர்மையுடன் செய்த இத்தூய அறப்பணிகள் இனிவரும் காலமெல்லாம் தொடர்ந்து நடைபெற வேண்டும். நம் வாழ்வுக்கும் ஆன்மீக நலத்துக்கும் உறுதுணையாக இருக்க வேண்டும். நகரத்தார்களின் பெருமை, உலக மக்களால் என்றென்றும் அறியப்பட வேண்டும். ஆகையால் இப்பணிகள் தொடர்ந்து நடைபெற இன்றைய நகரத்தார் அனைவரும், ஒல்லும் வகையெல்லாம் உதவ வேண்டும். அறக்கட்டளைகள் அளிக்க வேண்டும் என்ற வேண்டுகோளுடன் நூலினை நிறைவு செய்கிறார்.

சிறந்த நூலினைத் தமிழ் மணக்க எழுதிய, நண்பர் சொ.சொ.மீ. சுந்தரம் அவர்களுக்கும், நகரத்தார்களின் வடநாட்டுத் திருப்பணிகள் பற்றிய ஒரு சிறந்த நூலாக, இதை எழுதச் செய்த ஸ்ரீ காசி நகரச் சத்திர மேலாண்மைக் குழுத் தலைவர் கோட்டையூர் டாக்டர் எம்.ஆர். முத்தையா அவர்களுக்கும், என்னுடைய பாராட்டுகள் உரியனவாகுக.

அன்புடன்
**கப. அண்ணாமலை**

கயல்,
98, மூன்றாவது கிழக்குக் குறுக்குத் தெரு,
அண்ணா நகர், மதுரை – 625 020.

# பொருளடக்கம்

உ

சிவமயம்

ஸ்ரீ விஸ்வேஸ்வரர் துணை



# ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திர மேலாண்மைக் கழகம்

**நிர்வாகக் குழு**
**(2004 - 2007)**

தலைவர்

**கோட்டையூர் டாக்டர் MR. முத்தையா**

உப தலைவர்கள்

**கண்டனூர் அன்பு நா. சிதம்பரம்**

**காரைக்குடி PR. சொக்கலிங்கம்**

செயலாளர்

**வலையபட்டி அக்ரி. SP. சொக்கலிங்கம்**

பொருளாளர்

**கண்டவராயன்பட்டி SP. அழகப்பன்**

உதவிச் செயலாளர்கள்

**அரிமளம் AN. சோமசுந்தரம்**

**கொத்தமங்கலம் M. ராமனாதன்**



அருள்மிகு தங்க விசாலாட்சி அம்மன்



அருள்மிகு விசாலாட்சி அம்மன் - மூலவர்



**அருள்மிகு பாதாள ஈஸ்வரர்,** காசி நகரச் சத்திரம்




**காசி நகரச் சத்திரக் கல்வெட்டு**

# I - காசிப்பதி

மூர்த்தி, தலம், தீர்த்தம், மூன்றாலும் சிறப்புப் பெற்ற திருத்தலம் காசி. பனிரெண்டு ஜோதிர்லிங்கத் தலங்களில் மிகச் சிறப்புடையவை காசியும் இராமேஸ்வரமும் ஆகும். வடநாட்டு மக்கள் இராமேஸ்வர யாத்திரையை மிகப் புனிதமாகக் கருதுகிறார்கள். தென்னாட்டு மக்கள் காசிக்குச் சென்று வழிபடுவதைப் புனிதமாகக் கருதுகிறார்கள். இவை இரண்டும் இந்திய நாட்டின் ஒருமைப்பாட்டைத் தொன்றுதொட்டு நிலைநிறுத்தி வருகின்றன. இம்மைப் பேறுகளில் மிகச்சிறந்தது நல்ல பிள்ளைகளைப் பெறுவது. அறிவறிந்த மக்கட்பேறு தருவது இராமேஸ்வரம். பிறவாப் பெருவாழ்வான முத்தியின்பம் தருவது காசி. இராமேஸ்வரக் கோடி தீர்த்தம் விசுவநாதப் பெருமானுக்கு அபிஷேகமாகிறது. காசிக்கங்கை இராமநாதசுவாமிக்கு அபிஷேக மாகிறது.

உத்தரப்பிரதேசத்தின் இரண்டாவது பெரியநகரம் காசி—கங்கையுடன் கலக்கும் வருணை, அசி என்ற இரண்டு துணை ஆறுகளின் இடையில் உள்ளதால் காசியை வாரணாசி என்பர். இந்துக்கள் சீக்கியர்கள் பௌத்தர்கள் மூவரும் வழிபடும் நகரம் இது. வியாசரும், ஆதிசங்கரரும், மகாவீரரும், புத்தரும் துளசிதாசரும் வாழ்ந்த இடம் காசி. உடலுக்கு இதயம் போல இந்தியாவின் அருள்வடிவத்துக்கு இன்றியமையாதது காசி.

காசியில் எழுந்தருளி இருக்கும் விசாலாட்சியம்மை உடனாகிய விசுவநாதப் பெருமான் இத்தலத்தில் உயிர்விடும் எல்லாப் பிராணிகளையும் தன் திருவடியில் சேர்த்துக் கொள்கிறார். உடம்பைவிட்டு உயிர் பிரியும்போது அம்மையும் அப்பனும் காட்சி கொடுக்கிறார்கள். வருந்தும் உயிரின் களைப்பு நீங்கும்படி அம்மை தன் முந்தானையால் வீசுகிறாள். அப்பனாகிய விசுவநாதப் பெருமான் அப்பிராணியின் தலையைத் தன் வலது தொடையில் வைத்துத் திருவைந்தெழுத்தை உபதேசிக்கிறார்.

பரம்பொருள் இந்த அண்டங்கள் அனைத்தையும் தனக்குள் அடக்கிக் கொண்டு விசுவநாதனாகத் திகழ்கிறது. இறைவனைத்தவிர மற்றவையெல்லாம் அழிந்துவிடும் மகாமயானம் இது. சாவையே சாகவைத்து அமுதநிலையை அள்ளித்தரும் மயானம் இது. அன்னபூரணி இந்த அமுதை அளிக்கிறாள். விசாலமான கண்களால் விசாலாட்சி உலகையெல்லாம் பரிவோடு பார்த்து அருளன்னத்தை ஊட்டுகிறாள்.

இந்தத் திருத்தலத்தில் பூ மணக்காது, பிணம் நாறாது. பல்லி சொல்லாது. கருடன் பறக்காது. மாடு முட்டாது. எமன் பாசக்கயிறு வேலை செய்யாது. இங்கே எல்லாம் வயிரவமூர்த்தியின் காவலுக்கு உட்பட்டவை.

காசிக்கு மிஞ்சிய பதியும் இல்லை; கங்கைக்கு மிஞ்சிய நதியும் இல்லை. சிவபெருமான் அருளாட்சி புரியும் திருத்தலங்கள் நான்கு. அவை சிதம்பரம், காசி, காளத்தி, மதுரை என்று திருவிளையாடல் புராணம் குறிப்பிடுகிறது.

அன்னமலி வயல்புலியூர் காசிநகர் காளத்தி ஆலவாயாம்
இன்ன வளம் பதிநான்கு

என்பது பரஞ்சோதி முனிவர் பாடல். முத்தியளிக்கும் திருத்தலங்கள் ஏழு. அவை காசி, மாயாபுரி எனப்படும் ஹரித்துவார், அவந்தி, காஞ்சீபுரம், அயோத்தி, துவாரகை, மதுரை என்பவையாகும்.

காசி மாயாபுரி அவந்தி காஞ்சிமற்று
ஓசை கொள் அயோத்தி வண்துவரை ஒப்பறும்
ஏசிலா மதுரைஎன்று இசைக்கும் ஏழ்பதி
மாசறு முத்தியை வழங்கும் என்பவே

என்ற பாடல் இதை விளக்குகிறது. காசியில் வாழ்கிறவர்களைத் தொட்டாலும் போதும், பிறவித்துன்பம் தொலைந்து போகும் என்று அதிவீர ராமபாண்டியர் இயற்றிய காசிக்கண்டம் கூறுகிறது.

பாடகத் தொடர்ச்சிப் பழவினை சிமிழ்ப்பப்
பற்றற வெறிந்துவீ டளிக்கும்
சேடமை காசி உறையுநர் மேனி
தீண்டினும் பவக்கடல் அழுந்தார்

என்பது அவர்பாடல்.

எது சுயமாகப் பிரகாசிக்கிறதோ அது காசி. "தேசொடும் பொலிந்து முத்தி திருமகள் உறைதல் தன்னால் காசி என்றுரைப்பர்" என்று காசிக்கண்டம் கூறுகிறது. தமிழ் இலக்கியங்களிலும் சங்க காலம் தொட்டுக் காசி போற்றப்படுகிறது. கலித்தொகை குறிஞ்சிக்கலி வாரணவாசி என்று குறிக்கிறது. சிந்தாமணியில் காந்தருவதத்தை இலம்பகத்தில் வாரணவாசி மன்னன் என்ற தொடர் உள்ளது. மணிமேகலை 'வாரணாசி ஓர் மறையோம்பாளன்' எனப் [illegible]றது. திருஞானசம்பந்தர் க்ஷேத்திரக் கோவையில்

மாட்டூர் மடப்பாச்சி லாச்சி ராமம்
முண்டீச் சரம் வாதவூர் வாரணாசி

என்று பாடுகிறார். அப்பரடிகள் க்ஷேத்திரக் கோவைத் திருத்தாண்டகத்தில்

மண்ணிப் படிக்கறை வாழ்கொளி புத்தூர்
வக்கரை மந்தாரம் வாரணாசி

என்று குறிப்பிடக் காண்கிறோம். கயிலாச யாத்திரை சென்ற அப்பரடிகள் வாரணாசியை வணங்கிச் சென்றார் என்று சேக்கிழார் குறிப்பிடுகிறார்.

அன்னநாடு கடந்து கங்கை அணைந்து சென்று வலங்கொளும்
மின்னுவேணியர் வாரணாசி விருப்பினோடு பணிந்துடன்
பின் அணைந்தவர் தம்மை அங்கண் ஒழிந்து கங்கை பெயர்ந்துபோய்
மன்னு காதல்செய் நாவின் மன்னவர் வந்து கற்சுர முந்தினார்

என்பது பெரியபுராணம். இது தவிர இன்னும் பல இலக்கியங்கள் காசியின் புகழ் பாடுகின்றன. சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய சிவஞான பாலையசுவாமிகள் கலம்பகம், திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை இயற்றிய காசி ரகசியம் (1881) சிவஞானதேசிகர் இயற்றிய காசிக்கதிர்காமவேலர் திருவருட்பா ஆகியவை காசியின் புகழ்பாடுகின்றன. சிலகாலம் காசியில் அனுமான் கட்டத்துக்கு அருகில் வசித்த சுப்பிரமணிய பாரதியார் "காசிநகர்ப்புலவர் பேசும் உரைதான் காஞ்சியில் கேட்பதற்கோர் கருவி செய்வோம்" என்று பாடினார். தென்தமிழ்நாட்டு மக்கள் காசி மீது கொண்டுள்ள பற்றினால் தங்கள் ஊர்களுக்குத் தென்காசி என்றும் சிவகாசி என்றும் பெயர் வைத்தனர். திருமுறைகளில் காசிப்பதிகம் இருந்திருக்கலாம். அது கரையானுக்கும் கறைக்கண்டனுக்கும் அதைப்பாடிய நாயனாருக்கும் மட்டுமே தெரியும். நமக்குக் கொடுத்து வைக்கவில்லை. காசியின் பெருமையைக் காசிக்கண்டம் இப்படிப் பேசுகிறது.

காசியைக் குறித்துச் செல்லும் கால்களே கால்கள் ஆகும்.
காசியை வழுத்தும் நாவே நாவெனக் கூறலாமால்
காசியின் கதைகள் கேட்கும் செவிகளே செவிகள் ஆகும்.
காசியை இனிது காணும் கண்களே கண்க ளாமால்.

## குமரகுருபரரும் காசியும்

காசியில் முகம்மதிய மன்னன் ஆண்டகாலத்தில் சைவமுரசொலித்துச் சைவமடம் கட்டிச் சைவப் பேரரசு செலுத்தியவர் குமரகுருபர சுவாமிகள். எல்லா நதிகளும் கங்கையே; எல்லாத் தெய்வங்களும் விசுவநாதரே. எல்லா ஊரும் காசியே எனக்கண்டு

காணும் காணும் நதிகள்எல் லாம்புனல்
கங்கையே; அங்குள தெய்வம் யாவையும்

தாணு எங்கள் அகிலேசரே; மற்றைத்
தலங்கள் யாவும் தடமதில் காசியே

என்று பாடிய பெருமை அவருக்கே உரியது. திருச்செந்தூர் முருகப் பெருமான் திருவருளால் பேசும் திறமையும் பாடும் புலமையும் பெற்றுக் கந்தர் கலிவெண்பாப் பாடிய குமரகுருபர சுவாமிகள் காசிக்கு வந்தார். சைவமடம் கட்ட இடம் வேண்டும் என்று கேட்பதற்காக முகம்மதிய மன்னன் அரசவைக்குச் சென்றார். அரசன் இவருக்கு ஆசனம் அளிக்காமல் நிற்கச்செய்தான். மீனாட்சியம்மையை நினைத்தார். அவள் வாகனமாகிய சிங்கம் வந்தது. ஏறி அமர்ந்தார். சிங்க ஆசனத்தில் புவி மன்னன்; சிங்கத்தின் மீது கவியரசர்; கண்டவர் திகைத்தனர். சுவாமிகள் கலைமகளை எண்ணிச் சகலகலா வல்லிமாலை பாடினார்.

மண்கண்ட வெண்குடைக் கீழாக மேற்பட்ட மன்னரும் என்
பணகண் டளவில் பணியச் செய்வாய் படைப்போன் முதல்ஆம்
விண்கண்ட தெய்வம் பலகோடி உண்டேனும் விளம்பில் உன்போல்
கண்கண்ட தெய்வம் உளதோ சகலகலா வல்லியே

என்று பாடியதும் இந்திமொழி பேசும் திறமை பெற்றார். மன்னனிடம் இந்தியில் பேசினார். மடம் கட்ட இடம் கேட்டார். மனனன் அமைச்சரைப் பார்த்தான். மதியமைச்சர் "கங்கைக் கரையில் கருடன் பறக்கும் இடத்தைத் தருவோம்" என்றார் காசியில் கருடன் பறக்காது என்று அமைச்சருக்குத் தெரியும். எனவே இப்படித் தந்திரமாகக் கூறிவிட்டார். காசியில் கருடன் பறப்பதில்லை. ஏன ?

இலங்கையில் இராவணனைத் கொன்ற இராமபிரான், இராமேஸ்வரத்தில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து வழிபட்டுத் தன் பாவத்தைப் போக்கிக் கொள்ள நினைத்தார். சிவலிங்கம் கொண்டுவர அனுமாரைக் காசிகு அனுப்பினார். காசிக்கு வந்த அனுமார் அங்கே கருடன் வட்ட மிட்ட இடத்தில், பல்லி திருவுளம் சொல்லிய இடத்தில் இருந்த சுயம்பு லிங்கத்தை எடுத்துக்கொண்டு திரும்பினார். காசிக்குக் காவல் வயிரவமூர்த்தி. அவர் இசைவின்றிச் சிவலிங்கத்தை எடுத்த அனுமாரை அவா தடுத்து நிறுத்தினார். போர் மூண்டது. தேவர்கள் வந்து இருவரையும் வணங்கி இருவரும் சிவ அம்சம் பெற்றவர்கள். சண்டையில் யாரும் வெல்லவும் முடியாது, தோற்கவும் முடியாது. சண்டையை நிறுத்துங்கள் என்று வேண்டிக் கொண்டனர். சிவலிங்கத்தை அனுமார் எடுத்துச்செல்ல வயிரவர் ஒப்புக்கொண்டார். "அன்று முதல் காசியில் கருடன் பறக்கக்கூடாதென்றும் பல்லி திருவுளம் சொல்லக்கூடாது என்றும்" வயிரவர் ஆணையிட்டார்.

இதை அறிந்த அமைச்சர் சுவாமிகளை ஏமாற்றக் கருடன் பறக்கும் இடம் தருவோம் என்றார். மறுநாள் காலை யாவரும் கங்கைக் கரைக்குவந்தனர்.

சுவாமிகள் வயிரவரை வேண்ட, வயிரவர் விதிக்கு விலக்களிக்க, மசூதியைச் சுற்றிக் கருடன் பறக்க, அரசன் ஒப்புக் கொண்டபடி அந்த இடத்தைத் தர, அங்கே காசிமடம் பெரிய அரண்மனை போலக் கட்டப்பெற்றது. இது 1648ல் நிகழ்ந்தது. மடத்துக்கு முன்னால், கேதாரகட்டத்தில் கேதார ஈஸ்வரர் கோவிலும் கட்டப்பட்டது. தமிழ்நாட்டு முறைப்படி இங்கே வழிபாடுகள் சிறப்பாக நடந்து வருகின்றன.

### காசிக்கலம்பகம்

மாதுக்கு இடம் கொடுத்த விசுவநாதன், மடம்கட்ட இடம் கொடுத்த காரணத்தால் குமரகுருபர சுவாமிகள். காசிக்கலம்பகம் பாடினார். இது மிகச்சிறந்த நூல். இந்நூலில் சிவபெருமானாகிய அகிலேசர் மயிலேறும் முருகனுக்குத் தீப்பறக்கும் வேலைத்தந்தார். அடியார்களாகிய எங்களுக்கு அடித்தொழும்பு செய்யும் இவ்வேலை தந்தார் என்பதை

கேயூரம் ஊரக் கிளர்தோள் அகிலேசர்
மாயூரம் ஊரும்ஒரு மைந்தற்குத் – தீயூரும்
அவ்வேலை ஈந்தார் அடித்தொழும்பு செய்தொழுகும்
இவ்வேலை ஈந்தார் எமக்கு

என்று பாடுகிறார். காசிப்பெருமானைக் கண்டு தொழுதார் இனிப்பிறக்கமாட்டார். தொழாதார் பிறப்பார் என்பதை

புயலார் பொழிற்காசிப் பூங்கோவில் மேய
சுயலார் தடங்கணாள் காந்தன் – செயல், ஆவி
உய்யத் துதியார் உதிப்பார்; துதிப்பாரேல்
வையத்து உதியார் மறுத்து.

என்று மிக நயமாகக் குறிப்பிடுகிறார்.

ஆனந்தம் தரும் அன்னபூரணியுடன் ஆனந்தமான மகாமயானத்தில் ஆனந்தமாக ஆடும் பெருமான் அழகில் ஈடுபட்டுத் திளைத்து ஆடுங்கள். இல்லாவிட்டால் பிறவியில் அகப்பட்டு இளைத்து ஆட வேண்டும் என்று எச்சரிக்கிறார்.

ஆனந்த வல்லியுடன் ஆனந்தக் கானகத்தே
ஆனந்தக் கூத்தாடு அருட்கடலை – ஆனந்தங்
கொள்ளத் திளைத்தாடும்! கூடாதேல் இப்பிறவி
வெள்ளத்து இளைத்தாடு வீர்.

என்பது காசிக்கலம்பகம்

குமரகுருபர சுவாமிகள் காசியில் நீண்டகாலம் தங்கியிருந்தார். இந்தியிலும் தமிழிலும் சொற்பொழிவு செய்தார். கம்பராமாயணத்தை இவர் சொல்லக் கேட்ட துளசிதாசர் இந்தியில் "ராம சரித மானஸ்" என்ற பெயரில் இராமாயணம் பாடினார்.

காசிப்பதியைச் சிவபெருமானின் படைவீடு என்று குமரகுருபரசுவாமிகள் பாடுகிறார்.

செந்தேன் ஒழுகும் பொழிற்காசி, சிறுநுண் நுசிப்பில் பெருந்தடங்கண்
பைந்தேன் ஒழுகும் இடப்பாகர், படைவீடு என்பது உணராய் கொல்

என்று பாராட்டுகிறார். துறவியும், மடாதிபதியும், மடம் நிறுவியவருமாகிய குமரகுருபரர் பெருங்கவிஞராகவும் திகழ்ந்து பலநூற்களைப் பாடினார். சைவமடங்களில் இவர் கட்டிய காசித்திருமடம் அகில இந்திய மடம். அமெரிக்காவில் வேதாந்தசிங்கமாக விளங்கிய விவேகானந்தருக்கு முன்னால் காசியில் சைவ சித்தாந்த சிங்கமாக விளங்கிச் சிங்கத்தின் மேல் எழுந்தருளிய கவிச் சிங்கம் குமரகுருபர சுவாமிகள்.

## சைவசித்தாந்தமும் காசியும்

பதியாகிய ஆண்டவன் ஒருவன். பசுக்களாகிய உயிர்கள் பல. உயிர்களைப் பந்தித்து நிற்கும் பழவினைப் பாசங்கள் ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றுமாகும். இறைவன் திருவருளால், உயிர்கள் பக்குவப்படப் பாசம் எனும் தாழ் உருவப்படுகிறது. காசி மகாமயானம். சாமானிய மயானம் உடலைச் சுடுகிறது. இந்த மகாமயானம் உயிரைப் பற்றி நிற்கின்ற பாசங்களைச் சுடுகிறது. காசியில் இறக்க முத்தி என்றால் என்ன பொருள்? இந்தப் பாசங்கள் இறந்துபோவதால் ஆன்மா முத்தி அடைகிறது என்பது பொருள். காசிக்கு ஆனந்தவனம் என்று பெயர். எந்த இடத்தில் மேலும் அப்பால் செல்ல முடியாமல் வாக்கானது மனத்தோடு கூடத் திரும்புகின்றதோ அதுவே ஆனந்தம் என்று தைத்ரீய உபநிடதம் கூறுகிறது. "மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே" என்பது திருவாசகம். மாற்றமும் மனமும் கழிய நின்ற நிலை ஆனந்த நிலை. காசியில் இறப்பவர்க்கு உமாதேவியார் இளைப்பை மாற்றி முத்தி அருளுகிறாள் என்பது நம்நாட்டு வழக்கம். அழிப்பு என்பதே இளைப்பாற்றல்தான். நாசம் அன்று. காசியில் இறக்கும் பேறுபெற்ற ஆன்மாவுக்குத் திருவருள் பதிவு (சத்திநிபாதம்) உண்டாகிறது. காசியில் அன்னபூரணி எல்லோருக்கும் அன்னம் பாலிக்கிறாள். இதன் பொருள் என்ன? "எத்திறம் நின்றான் ஈசன், அத்திறம் அவளும் நிற்பாள்" என்று சிவஞான சித்தியார் கூறுவது போல, அன்னபூரணி, உலக உயிர்களுக்கெல்லாம், அவரவர் பக்குவத்துக்கேற்ப, தனுகரணபுவன போகங்களைத் தந்து, வினையை அனுபவிக்கச் செய்து, வினைகழிய வைக்கிறாள். காசி என்ற சொல்லைத்திருப்பிப்

போட்டால் சிகா என்று வரும். அதற்கு முடி என்று பொருள். காசியே தலங்களுக்குள் முடிமணி போல் தலையாயது என்பது இதன் விளக்கம். காசியில், பெருமான் உபதேசிப்பதை

காசி தன்னிடை முடிபவர்க்கு எம்பிரான் கழறும்
ஆசில் தாரகப் பிரமமாம் அதன்பொருள்.

என்று கந்தபுராணம் பேசுகிறது.

## ஆதிசங்கரரும் காசியும்

காசியில் பல காலம் வாழ்ந்தவர் ஆதிசங்கரர். பத்மபாதர் என்ற புகழ்மிக்க சீடர் இங்கேதான் குருவை நாடி வந்தார். பல்லாண்டுகளாக இலக்கணப் பயிற்சியில் வாழ்நாளை வீணாக்கிய ஒருவனைப் பார்த்துப் பஜகோவிந்தம் பஜகோவிந்தம் பஜகோவிந்தம் மூடமதே என்று ஆதிசங்கரர் பாடியதும் காசிப்பதியில் நிகழ்ந்தது. ஒரு நாள் ஒரு கிழட்டு அந்தணர் மகாஞானியாகத் தோன்றி பிரம்ம சூத்திரபாஷ்யம் பற்றி விவாதம் செய்தார். ஆதிசங்கரர் அவர் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் விடை சொல்லி அவரைத் திருப்திப்படுத்தினார். இறுதியில் அந்தப் பெரியவர் தன் உண்மையான வடிவத்தைக் காட்டினார். வேதங்களைத் தொகுத்த கிருஷ்ணத்வைபாயன வியாசமுனிவராகத் தோன்றி அருள்செய்தார். வியாசர் இருந்த இடம் வியாச காசி என்றழைக்கப்படுகிறது. இங்கே வியாசர் வழிபட்ட மிக அழகாக ஒளிவீசும் சிவலிங்கம் இருக்கிறது; காசி மன்னர் அரண்மனையின் மேற்பகுதியில் இந்தச் சிவாலயம் உள்ளது.

கங்கையில் நீராடிவிட்டு ஆதிசங்கரர் வந்துகொண்டிருக்கிறார். அவருக்குமுன்னால் நான்கு நாய்கள் சூழ ஒரு தோல்பையில் தண்ணீர் ஏந்திக் கொண்டு புலையன் ஒருவன் வருகிறான். இவர் அவனைப் பார்த்து விலகு விலகு என்றார். அவன் கேட்டான் "எதை விலகச் சொல்கிறாய் ஆன்மாவையா? உடம்பையா?" இவருக்குப் புரிந்தது. தனக்கு உபதேசிக்க விசுவநாதப் பெருமானே எழுந்தருளி வேதங்களையே நாய்களாக மாற்றி அருட்காட்சி அளித்தான் என்று உணர்ந்து கொண்டார். "இந்த உலகை, அத்வைத நோக்கினால், உணரக்கூடியவன் எவனோ அவன் சண்டாளனாக இருந்தாலும், வேதியனாக இருந்தாலும் அவன் என் குருநாதன்" என்று உரைத்து மனீஷா பஞ்சம் எனப்படும் ஐந்து சுலோகங்களைப் பாடினார்.

## காசியும் யோகிராம் சுரத்குமார் சுவாமிகளும்

திருவண்ணாமலையில் விசிறி சுவாமிகளாக வீற்றிருந்து ஞானமழை பொழிந்த யோகிராம் சுரத்குமார் சுவாமிகள் 1–12–1918ல் காசிக்கு அருகில் உள்ள ஒரு

சிற்றூரில் பிறந்தவர். இவர் கங்கைக்கரையில் பல சாதுக்களைச் சந்தித்தார். அவர்கள் கூறியவற்றைப் பற்றிச் சிந்தித்தார். மலருக்கு முளைக்கும் போதே மணம் வந்தது. இளமையிலேயே சாதுசங்கம் இவருக்கு இன்பமூட்டியது. பதினாறாம் வயதில் ஒரு பறவையை விரட்டக் கயிற்றை வீசினார். அது பறவையின் மேல் பட்டுப் பறவை இறந்தது. இவருக்கு அளவில்லாத துன்பம் உண்டாயிற்று. காசி விசுவநாதப் பெருமான் சந்நிதியில் வாரக்கணக்கில் கிடந்தார். தவம் புரிந்தார். சாரநாத் சென்று பௌத்த விகாரத்தைப் பார்த்தார். 1937ல் கங்கைக் கரைச் சந்நியாசி ஒருவர் இவரைத் தடுத்தாட்கொண்டார். விசுவநாதர் சந்நிதியில் இவர் "என்தந்தையே உன்னைக் காணாமல் பல ஆண்டுகள் வீணாகிவிட்டனவே! நான் உன் மகன் அல்லவா? உன்னிடம் என்னை அழைத்துக்கொள்ள மாட்டாயா?" என்று கதறினார். விசுவநாதர் கருணை காட்டினார். யோகிராம் சுரத்குமார் புதுவையில் அரவிந்தரைப் பார்த்தார். அருணையில் ரமணரை அடைந்தார். இறுதியாக 1952ல் காஞ்சன் காடு ராமதாசர் மூலம் ஸ்ரீ ராமமந்திர உபதேசம் பெற்றுத் தவத்தால் தன்னை உணர்ந்து 1959ல் திருவண்ணாமலைக்கு வந்து தன் ஞானத்தவம் பலருக்கும் பயன்படச் செய்தார். தன்னைப் பிச்சைக்காரன் என்று கூறிக்கொண்டு அனைவருக்கும் அருட்பிச்சை போட்ட சுவாமிகள் காசிப்பதியில் கங்கைக் கரையில் பூத்துத் திருவருணையில் மணம் வீசிய மலராய்த் திகழ்ந்தார்.

## அகல்யாபாயும் காசியும்

காசி விசுவநாதர் முகமதியர்களால் கங்கையில் மூழ்கடிக்கப்பட்டார். ராஜபுத்திர ராணி அகல்யாபாய் காசிக்குவந்தாள். விசுவநாதரைக் காணாமல் வருந்தினாள், அழுதாள். விசுவநாதர் கிடைக்க வேண்டுமென்று 48 நாட்கள் கங்கைக்கரையில் உண்ணாநோன்பு நோற்றாள். தவம் செய்தாள். 48 ஆம் நாள் கங்கையில் மூழ்கினாள். அவள்கைக்குள் வந்தமர்ந்தார் விசுவநாதப் பெருமான் அன்பெனும் பிடியுள் அகப்படும் மலை அகல்யாபாயின் கரத்தில் இருந்தது. அந்தச் சிவலிங்கப்பெருமானை இப்போது கட்டப்பட்டுள்ள கோவிலில் பிரதிஷ்டை செய்தார்கள். (பழைய கோவில் மசூதியானதாகக் கூறப்படுகிறது. விசுவநாதர் கோவிலின் பின்புறம் அந்த மசூதி உள்ளது) பண்டாக்கள் இது உண்மையான விசுவநாதர் இல்லை என்றார்கள். அகல்யாபாய் இறைவனை வேண்டினாள். ஏதேனும் அற்புதம் நிகழ்ந்தாலன்றிப் பண்டாக்கள் நம்பமாட்டார்கள். எனவே விசுவநாதப் பெருமான், நடுவில் இருந்தவர் நகரத் தொடங்கினார். நகரத்தில் தொடங்கும் மந்திர மானவர், நகரத்தார்களின் நற்பணி ஏற்பவர், நாடு வியக்க நகரத் தொடங்கினார். சந்நிதியின் ஈசானிய (வடகிழக்கு) மூலையில் எழுந்தருளினார். இன்னும் அப்படியே காட்சி அளிக்கிறார். சிவலிங்கப்பெருமான்

மேல், முகமதியர்களால் பாதிக்கப்பட்டதால் வந்தவடு, இன்னும் இருக்கிறது. காசிக்கோவில் மகாத்வாரங்கள் அகல்யாபாய் பெயரால் அழைக்கப்படுகின்றன. கங்கையின் 64 கட்டங்களில் அகல்யாபாய் காட் என்பதும் ஒன்றாகும். இந்த அரிய செய்தி இராயவரம் ஆர்.எம். இராமசாமி அவர்களால் வாரணாசி மகத்துவம் என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## காசியும் குழந்தையானந்த சுவாமிகளும்

மீனாட்சியம்மையின் திருக்குழந்தையாக வளர்ந்த குழந்தையானந்த சுவாமிகள் மதுரை அரசரடியில் சமாதி கொண்ட மகான். இவர் பலகாலம் காசியில் திரைலிங்க சுவாமிகள் என்ற பெயரோடு வசித்துவந்தார். குருதேவர் இராமகிருஷ்ணர் காசியில் தங்கியிருந்தபோது இவரைச் சந்தித்தார். இவரைப் பற்றிக் குருதேவர் "விசுவநாதரே இவர் உடலில் பிரகாசித்துக் கொண்டிருக்கிறார். இவர் இருப்பதால் காசிநகரமே உயிர்த்துடிப்புடன் மிளிர்ந்து கொண்டிருக்கிறது. உடல் உணர்வற்ற மிகப்பெரிய ஞானி இவர்". கொதிக்கும் வெயிலில் படுத்திருப்பார். ஒரு நாள் நான் அவருக்குப் பாயாசம் கொண்டு போய்க் கொடுத்தேன். அவரிடம் "கடவுள் ஒருவரா அல்லது பலரா ?" என்று சைகை மூலம் கேட்டேன். அவர் மௌன விரதம் இருந்தார் சைகை மூலம் "சமாதி நிலையில் ஒருவராகக் காண்கிறோம். நான், நீ, உயிர், உலகம் போன்ற பலவாகக் காணும்போது கடவுளும் பலரே என்றார். இதுதான் உண்மையான பரமஹம்சநிலை" என்று கூறுகிறார்.

காசியில் தமிழர்கள் அதிகம் வாழ்ந்துவரும் இடம் ஹனுமான்கட்டம் சுமார் 130 ஆண்டுகளுக்குமுன் இப்பகுதியில் ருக்மிணி என்ற அம்மையார் வசித்து வந்தார். இவருக்கு ஆயிரம் பேருக்குக் கங்கைக் கரையில் அன்னதானம் செய்ய வேண்டும் என்று ஆசை. ஆனால் அதற்கேற்ற பொருள்வசதி இடவசதி உடல்வலிமை எதுவும் இல்லை. கங்கையில் மிதந்தபடி காட்சியளிக்கும் திரைலிங்க சுவாமிகளிடம் அம்மையார் வந்து தன் ஆசையை வெளியிட்டு என்னால் இந்த ஆசையை நிறைவேற்ற முடியாது. நீங்கள் மட்டுமாவது வந்து உணவருந்திச் செல்ல வேண்டும் என்று வேண்டினாள். சுவாமிகள் உடன்பட்டார். இல்லத்துக்கு வந்தார். தலைவாழை இலை போடப்பட்டது. பாட்டிருக்மிணி பரிமாற ஆர்வமுடன் உண்டார் சுவாமிகள். பாட்டி மகிழ்ந்தாள். சுவாமிகள் அவளை ஆசீர்வதித்தார். அக்கணமே கங்கைநீரில் குதித்தார். மிதந்தபடி தன்னிடம் சேர்ந்தார். சுவாமிகள் சாப்பிட்ட இலை யார் காலிலும் படக்கூடாது என்று புறக்கடையில் ஒரு பள்ளம் தோண்டி, இலையைப் போட்டு மூடிவிட்டு உள்ளே வந்தாள் ருக்மிணிப்பாட்டி. என்ன ஆச்சரியம்! சுவாமிகள் சாப்பிட்ட இடத்தில் சாப்பிட்ட இலைபோல் மற்றொரு இலை கிடந்தது. அதையும் கொண்டு போய்த் தொட்டிப்பள்ளத்தில் போட்டாள். வந்து பார்த்தாள். அடுத்த இலை கிடந்தது. எடுக்க எடுக்க இலை வந்தது. நூற்றுக்கணக்கான இலைகளை எடுத்துக்கொண்டு போய்ப் போட்டுப் பாட்டி

அசந்து விட்டாள். இலைகள் இன்னும் வந்தன. சுவாமிகளிடம் ஓடினாள். சுவாமிகள் சிரித்தார். 'வருவாய் என்று தெரியும்' என்றார். "ஆயிரம் பேருக்கு உணவிட ஆசைப்பட்டாய். அதன் பலன் கிடைக்க வேண்டும் என்று ஆசைப்பட்டாய். எனக்கு மட்டும் சோறு போட்டாய். ஆயிரம் பேருக்குச் சாப்பாடுதான் போடவில்லை. ஆயிரம் இலையாவது எடுக்கக்கூடாதா? நல்ல காரியம் செய்யும் போது பலனை எதிர்பார்த்துச் செய்யாதே. பலனை எதிர்பார்ப்பவன் அதற்கான உழைப்பைக் கொடுக்க வேண்டாமா. திரும்பிப் போ. அங்குள்ள இலையை எடுத்துவிடு. இனித்தோன்றாது. இலை மட்டுமல்ல. உன் பிறவியும் தான்." என்றார்.

செய்தல் உன் கடனே – அறம்
செய்தல் உன் கடனே – அதில்
எய்துறும் விளைவினில் எண்ணம் வைக்காதே

என்று பாரதி பாடிய பகவத் கீதையைச் சுவாமிகள் காசிப் பதியில் கங்கைக் கரையில் எளிதாக விளக்கி விட்டார்.

## காசியும் கட்டிக்குளம் மாயாண்டி சுவாமிகளும்

திருப்பரங்குன்றத்தில் திருக்கூடல் மலையில் கோவில் கொண்டு அருள்புரியும் சித்தர் மாயாண்டி சுவாமிகள். இவருடைய அணுக்கத் தொண்டர் இருளப்பக் கோனார். வடக்குமாசி வீதியில் முதலாளி என்று பலராலும் போற்றப்பட்ட கோனாருக்குக் காசி பார்க்க ஆசை. இப்பிறவியில் மாயாண்டி சுவாமிகள் ஆட்கொண்டு விட்டார். அடுத்த பிறவி இனி இல்லை. எனவே இப்பிறப்பிலேயே காசி பார்க்க வேண்டும் என்று எண்ணிக் குருநாதரிடம் சொன்னார். மாயாண்டி சுவாமிகள் "அப்பு! காசிக்குப் போகணுமா? அன்னபூரணியைப் பார்க்கணுமா? அன்னபூரணியைப் பார்க்க நினைத்தால் அன்னதானம் செய்" என்றார். கோனார் திருக்கூடல்மலையில் அன்னதானம் செய்தார். மலையெல்லாம் இலையாய்க்கிடந்தது. சுவாமிகள் கோனாரைக் கட்டிக்குளத்துக்கு அருகில் உள்ள கருப்பனேந்தல் தியானமடத்துக்கு அழைத்துச் சென்றார். தீபாராதனை காட்டினார். இருளப்பக்கோனார் தீபஒளியில் காசியைக் கண்டார். எங்கும் சிவமயம்; எல்லாம் சிவலிங்கம்; கங்கை தெரிந்தது; காசிக் கோபுரம் தெரிந்தது; பலகோடி சித்தர்கள் வந்து கண்டு மகிழும் விசுவநாதப் பெருமானுடைய சோதிலிங்கம் தெரிந்தது. இருளப்பக்கோனார் இருந்த இடத்தில் இருந்தபடி குருவருளால் காசியைக் கண்டார். அவர் முன்னால்

கங்கையைச் சடையில் தாங்கிக் கருணையே வடிவமாகிப்
பொங்கிடும் மகிழ்வோடு அன்ன பூரணி பிச்சை ஏற்று
மங்கலம் அருளும் கண்கள் மலர்விசா லாட்சி யோடும்
செங்கதிர் கோடி போலத் திகழ்ந்தனன் விசுவநாதன்

தீபாராதனை முடிந்தது. தெரிந்த காட்சி மறைந்தது. கோனார் கொடுத்துவைத்தவர். குருவே காசியைக் கொணர்ந்து காட்டினார். இதன்பிறகு கட்டிக்குளம் மாயாண்டி சுவாமிகள் காசிக்கு வந்து விசுவநாதப் பெருமானை வணங்கி மீண்டார்.

## காசியும் துளசீதாசரும்

இளமையில் பெண்ணாசை மிக்கவராக இருந்து, மனைவி கூறிய உபதேசத்தால் துறவற மேற்றவர் துளசீதாசர். காசியில் வாழ்ந்தார். இராமபிரானைக் காண ஆசைப்பட்டார். அனுமனை வணங்கினார். அனுமன் காட்சிதர, இராமனைப் பார்க்கும் ஆசையை வெளிப்படுத்தினார். இராமன் அனுமன் கூறியபடி காட்சியளித்தான். முதலில் கிழப்பக்கிரியாய் வந்தான். பின்னர் நோயாளியாய் வந்தான். துளசீதாசர் ஏமாந்தார். இறுதியில் எம்பிரான் இராமனாகவே காட்சி தந்தான். இராமாயணத்தை இந்தியில் பாடு என்றான் குமரகுருபரர் காசியில் கம்பராமாயணம் பேருரையாற்றிய போது அதைக்கேட்கும் வாய்ப்பு துளசிக்கும் கிடைத்தது. இந்தியில் இராமசரித மானஸ் என்ற பேரிலக்கியம் உருப்பெற்றது.

## காசியும் இராமகிருஷ்ண பரமஹம்சரும்

இராமாவதாரமும் கிருஷ்ணாவதாரமும் இணைந்த அவதாரமாக, நம்மை ஆட்கொள்ள நமக்காகப் பிறவி எடுத்தவர் பகவான் இராமகிருஷ்ணர். குருதேவர் என்று போற்றப்படும் இந்தப் பேரருளாளர் காசியில் பெற்ற அருளனுபவம் வாக்கிற்கும் மொழிக்கும் அப்பாற்பட்டது. காசிக்குத் தீர்த்த யாத்திரையாக வந்தார் குருதேவர். அவருடன் வந்த மதுர்பாபு அந்தணர் பலருக்கும் அன்னதானம் செய்தார். துணிமணி, போர்வை, செருப்பு, பாத்திரங்கள் எல்லாம் கொடுத்தார். இப்பொருட்களைப் பெற்றுக் கொள்வதில் அந்தணர்கள் சண்டையிட்டு ஒருவரையொருவர் அடித்துக்கொண்டார்கள். குருதேவருக்கு வெறுப்புண்டாகிவிட்டது. "இது எவ்வளவு பெரிய புண்ணிய பூமி! காசிக்குவந்துமா இப்படிச் சண்டை போடுவது ?" என்று வேதனைப்பட்டார். அவர் காசிக்கு வந்து காசியைப் பார்த்ததும் எல்லாம் சிவலிங்கமாகத் தெரிந்தது. "இச்சிவபுரி பொன்னால் ஆக்கப்பட்டது. இங்கே கல் இல்லை. மண் இல்லை. எல்லாம் பொன் மயம். கயிலாயம் பொன்மலை காசி பொன்னகர்" என்றார் குருதேவர்.

புகுவ தாவதும் போதர வில்லதும் பொன்னகர் புகப் போதற்கு
உகுவ தாவதும் எந்தை எம்பிரான் என்னை ஆண்டவன் சுழற்கன்பு
நெகுவ தாவதும் நித்தலும் அமுதொடு தேனொடு பால்கட்டி
மிகுவ தாவதும் இன்றெனின் மற்றிதற்கு என்செய்கேன் வினையேனே

என்று திருவாசகத்தில் மாணிக்கவாசகர் இறைவன் திருத்தலத்தைப் பொன்னகர் என்று குறிப்பிடுவது போலக் காசி, குருதேவர் கண்களுக்குப் பொன்னகர் ஆகத் தோன்றியது. இந்தியமக்கள் அனைவரும் பொழிந்த பொன் மழையால் கட்டப்பெற்றுப் பொன்மனச் சான்றோர்கள் பலரால் புனிதம் பெற்ற இந்தப் பொன்னகரில் இயற்கைக்கடன் கழிக்கக் கூடாது என்று குருதேவரின் குழந்தையுள்ளம் பக்திப் பரவசத்தால் நினைத்தது. ஒரு பல்லக்கு ஏற்பாடு செய்து, காசிநகரின் எல்லையைத் தாண்டி, அசி ஆற்றைக்கடந்து சென்று இயற்கைக் கடன் கழித்தார். சில நாட்களுக்குப்பின் இந்த மனநிலை மாறியது. காசியில் எல்லாம் சிவம் எங்கும் சிவம். இடுப்புக்குக் கீழே பொன்நகைகள் அணியக்கூடாது என்பது வங்காளிகளின் பழக்கம். ஏன் ? பொன் புனிதமானது. அதுபோலக் காசியும் புனிதமான பொன்னகர் என்று குருதேவர் நினைத்தார். ஒரு நாள் மதுர்பாபுவுடன் குருதேவர் கங்கையில் உள்ள மணிகர்ணிகை கட்டத்தை நோக்கிப் படகில் சென்றார். மணிகர்ணிகையில் தான் பிணங்கள் அதிகமாக எரிக்கப்படும். அந்தச் சுடுகாடு பிணங்கள் எரிந்ததால் வந்த புகையால் மூடப்பட்டிருந்தது. உணர்வு மயமாக இருந்த குருதேவர் இதைக்கண்டதும் ஆனந்த பரவசமுற்றார். திடீரென எழுந்து படகின் ஓரத்துக்கு ஓடினார். அங்கேயே அசைவற்று நின்றார். ஒருகை மேலே சென்றது. முகத்தில் பேரருள் பொங்கித் ததும்பியது. அப்படியே சமாதியில் ஆழ்ந்துவிட்டார். அவரிடம் தெரிந்த அற்புதப் பேரொளி அந்தப் பகுதி முழுவதையும் ஒளி வெள்ளத்தில் ஆழ்த்திவிட்டது. படகுக்காரனும், மதுர்பாபுவும் படகை மெதுவாகக் கரைசேர்த்தனர். குருதேவரின் பரவசநிலை மாறியது. அப்பொழுது அவர் கூறினார். 'உயரமான ஒரு வெண்ணிற மனிதர் மஞ்சள் நிறச் சடைமுடியுடன் கம்பீரமாக நடந்து, அங்கே எரிந்துகொண்டிருந்த ஒவ்வொரு சிதையின் அருகிலும் சென்றார். அந்த உயிரை எழுப்பினார். அதன் செவியில் தாரகப் பிரம்ம மந்திரம் கூறினார். பேராற்றல் மிக்க மகாசக்தி சிதையின் மறுபக்கத்தில் அமர்ந்து, அந்த உயிரைப் பிணைத்திருக்கும் தூல, சூட்சும, காரண, சம்ஸ்கார வடிவ பந்தங்களை எல்லாம் நீக்கினாள். தன் கைகளினாலேயே முத்தி வாயிலைத்திறந்து, அந்த உயிர்களைச் சச்சிதானந்தமாகிய இறைவனோடு ஒன்றச் செய்தாள். எத்தனையோ காலம் யோகமும் தவமும் செய்து அடையக் கூடிய பேரானந்த அனுபவத்தை, அந்த உயிர்களுக்கு விசுவநாதர் அங்கேயே அப்பொழுதே வழங்கினார்.' என்று தான் கண்ட காட்சியை யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்ற உயர்ந்த எண்ணத்தோடு படம் போலக் காட்டினார் குருதேவர். சாத்திரங்கள் கூறுவது உண்மைதான். காசியில் இறப்பவர்களுக்கு எம்பெருமான் விசுவநாதன் முத்தியருள்கிறான் என்பது தெளிவாக்கப்பட்டது.

## காசியும், சாரதா தேவியும்

ஒரு பெண்ணின் வாழ்க்கை எவ்வளவு உயர்ந்த நிலைகளை எட்டமுடியும் என்று வாழ்ந்து காட்டியவர் அன்னை சாரதா தேவியார். குருதேவர் மறைந்த பிறகு அன்னையார் இரண்டு முறை காசியாத்திரை செய்தார்கள். அவர்கள் காசியைப் பார்க்குமுன்பே அவர்களுக்கு அன்னபூரணி தரிசனம் கொடுத்து விட்டாள்.

கல்கத்தா தக்ஷிணேசுவரத்தில் காளிகோயிலுக்கு அருகில் தனக்காகக் கட்டப்பட்ட சிறுவீட்டில் அன்னையார் வசித்தபோது (1874 ஆம் ஆண்டு) குரு தேவர் கடுமையான வயிற்றுக் கடுப்பினால் பாதிக்கப்பட்டார். அவரால் நடக்கக்கூட முடியவில்லை. குருதேவரை அன்னையார் அடிக்கடி சென்று கவனித்துக் கொண்டார்கள். அருகிலிருந்து கவனிக்க முடியவில்லையே என்று வருந்தினார்கள். அப்பொழுது உதவிக்கு ஒரு பெண் வந்து சேர்ந்தாள். காசியைச் சேர்ந்தவள் என்று கூறினாள். குருதேவருக்கான எல்லாப் பணிவிடைகளையும் செய்தாள். அன்னையாரிடம் "இவர் இப்படி இருக்கும்போது நீங்கள் வேறு வீட்டில் இருப்பது சரியல்ல" என்று கூறி அன்னையாரை அங்கேயே நகபத் என்ற சிறிய அறையில் தங்க வைத்தாள். அன்னையார் எப்பொழுதும் முகத்திரை போட்டிருப்பார்கள். அப்பொழுது அன்னையாருக்கு 21 வயது. ஒரு நாள் இரவில் அந்தக் காசிப் பெண், அன்னையாரைக் குருதேவரிடம் அழைத்து வந்தாள். அவர் முன்னால் அந்த முகத்திரையை விலக்கினாள். சக்தி தன் வடிவத்தைச் சிவத்துக்குக் காட்டுவதுபோல உலகுக்குக் காட்டினாள். குருதேவர் பரவச நிலையில் ஆழ்ந்தார். மறுநாள் அவர் நோய் நீங்கியது. காசிப் பெண்ணையும் காணவில்லை. தூய அன்னையார் உணர்ந்து கொண்டார். வந்தவள் அனைவருக்கும் அமுதளிக்கும் அன்னபூரணி என்று. அன்னை அதன்பிறகு அங்கேயே தங்கி விட்டார்.

குருதேவரின் மறைவுக்குப் பின் அன்னையார் காசிக்கு வந்தார்கள். ஒருநாள் காசி விசுவநாதர் கோயிலில் மாலை வழிபாட்டில் கலந்து கொண்டார்கள். மிகவுயர்ந்த பரவசநிலைக்கு ஆளானார்கள். திரும்பி வரும்போது வழக்கத்திற்கு மாறாக, மிகுந்த வேகத்துடன் அடியெடுத்து வைத்து நடந்தார்கள். பின்னர் அதற்கான காரணம் கேட்டபோது, "கோயிலிலிருந்து நான் திரும்பி வந்தபோது குருதேவர் என் கையைப் பிடித்து அழைத்து வந்தார்" என்றார்கள்.

பின்னர் ஒருமுறை காசியில் அவதூதராக விளங்கிய பாஸ்கரானந்தரைச் சந்தித்தார்கள். அவர் "அன்னையே! சங்கடப்படாதீர்கள். நான் உங்களிடம் அந்த அகிலாண்ட நாயகியையே காண்கிறேன்" என்றார். குருதேவரை இழந்த துன்பத்தில் இருந்த அன்னையார் மனம் ஆறுதல் பெற்றது.

மற்றொரு நாள் அன்னையார் கங்கையில் நீராட ஆசைப்பட்டார்கள். இது காசிக்கு வருமுன் நடந்த நிகழ்ச்சி. மறைந்த குருதேவரை நினைத்துக் கொண்டே காமார்ப்புகூரில் நடந்து வந்து கொண்டிருந்த போது, எதிரில் குருதேவர் வருவதுபோலத் தெரிந்தது. வியப்புத் தாளவில்லை. அவருக்குப் பின்னால் நரேந்திரன், ராக்கால், பாபுராம் போன்ற சீடர்கள் வந்தனர். குருதேவரின் பாதங்களிலிருந்து தண்ணீர் ஊற்றெடுத்துப் பெருகி, அவருக்கு முன்னால் அலைகளை வீசிப் பாய்ந்தது. "இது தான் கங்கை" என்று மலரிட்டு வணங்கினார் அன்னையார். வாமனன் வளர்ந்து உலகளந்தபோது ஒரு திருவடி வானுலகம் செல்ல, அந்த மலரடியில் கமண்டலப் புனிதநீர் விட்டுப் பிரமதேவன் வழிபட, அப்போது உருவானது தான் ஆகாச கங்கை. அதுபோல இப்பொழுதும் இராமகிருஷ்ணர் திருவடியிலிருந்துதான் ஞானக்கங்கை தோன்றுகிறது என்பதை அன்னையார் அறிந்து கொண்டார். வானக் கங்கையும், ஞானக் கங்கையும் குருதேவரின் மலரடிப் பிரசாதம் என்பதை உலகம் அறிந்தது.

1912ல் இரண்டாவது முறை அன்னையார் காசிக்குச் சென்றார்கள். கேதார கட்டத்திலுள்ள கேதார நாதர் ஆலயத்தில் வழிபட்டார்கள். "இமயமலையில் உள்ள கேதாரநாதர் ஆலயமும் இந்த ஆலயமும் ஒன்றுக்கொன்று உறவானது. இவரைத் தரிசிப்பவர்கள் இமயத்தில் உள்ளவரைத் தரிசித்தவர்கள் ஆவார்கள். இங்கே சிவபெருமான் உயிர் உணர்வுடன் பொலிகிறார்" என்று குறிப்பிட்டார்கள். காசியில் புகழ்பெற்ற இரண்டு மகான்களைத் தரிசித்தார்கள். நானக் துறவி என்பவரையும் சமேலிபுரி என்பவரையும் கண்டு வணங்கினார்கள். அன்னையுடன் சென்ற கோலாப்மா என்ற அம்மையார் சமேலிபுரி என்ற சாதுவிடம் "உங்களுக்குக் காசியில் யார் உணவு தருகிறார்கள்?" என்று கேட்டார். அவர் "என் தாயான அன்னபூரணிதான் தருகிறாள். வேறு யார் எனக்குச் சோறு போடுவார்கள்?" என்றார். இதைக் கேட்ட அன்னையார் ஆனந்தப் பரவசம் அடைந்தார்கள்.

## காசியில் விவேகானந்தர்

1888ல் சுவாமி விவேகானந்தர் காசிக்கு வந்தார். பிரேமானந்தர் பக்கீர் பாபு இருவரும் கூடச் சென்றார்கள். ஒருநாள் சுவாமி விவேகானந்தர் துர்கா மந்திர் சென்று திரும்பிக் கொண்டிருந்த பொழுது ஒரு குரங்குப் படை அவரைத் துரத்தத் தொடங்கியது. (திரேதாயுகத்தில் அனுமானாக வந்தவர் இவர்தான் என்று தெரிந்து கொண்டது போலும்) சுவாமிகள் ஓட ஆரம்பித்தார். குரங்குகளும் வேகமாகப் பின்தொடர்ந்தன. ஒரு சாதுவின் குரல் ஒலித்தது. "ஓடாதே நில். அந்தக் குரங்குகளுக்கு முகம் கொடுத்து வெற்றி கொள்" என்றது அக்குரல். சுவாமிகள் கம்பீரமாகத் திரும்பி நின்றார். குரங்குகள் திரும்பி ஓட்டம் பிடித்தன. நியூயார்க்கில்

சுவாமிகள் இந்தக் காசி நிகழச்சியைக் கூறி "அறியாமை மாயை இவற்றுக்குப் பயந்து ஓடாதீர்கள். எதிர்த்து முகம் கொடுத்து வெல்லுங்கள்" என்று மக்களுக்கு ஆணையிட்டார்.

### சோழி மாதா

சோழி மாதா என்று அழைக்கப்படும் தேவி காசிக்கு வந்தவர்கள் புண்ணியம் பெறாமல் தடுத்துக் கொண்டிருந்தாள். பக்தர்கள் முறையிட்டனர். விசுவநாதர் அவளை ஊருக்குக் கடைசியில் இருக்கக் கட்டளையிட்டார். மனம் திருந்தி வருந்தினாள் சோழி மாதா. அவள் வேண்டுகோளுக்கிணங்க "காசிக்கு வரும் பக்தர்கள் ஊருக்குத் திரும்பும் சமயம் உன்னை வணங்குவார்கள். சோழிகளுடன் காசு போடுவார்கள். காசிக்கு வந்த புண்ணியத்தை அவர்களுக்கு நீ கொடுப்பாய்" என்று விசுவநாதர் அருள் வழங்கினார். சோழி மாதாவின் கோயில், துர்கா தேவி கோயிலுக்கு அருகில் ஊர் நடுவில் ஒதுக்குப் புறத்தில் உள்ளது.

### சாரநாத்

காசியின் வடகிழக்கு மூலையில் சாரநாத் என்ற சிற்றூர் உள்ளது. புத்தர்க்கே உரிய அமைதி தவழும் சாரநாத்திலிருந்துதான் பௌத்தமதம் பரவியது. புத்தர் பெருமான் அறவுரைகள் அருளிச் செய்து அறச்சக்கரத்தை இயக்கிய இடம் இதுவேயாகும். இந்திய அரசின் சின்னமான சிங்கமும், தர்ம சக்கரமும் சாரநாத்தில் உள்ள தூணிலிருந்து எடுக்கப்பட்டவை. இங்கு, எண்கோணக் கோபுரத்தை உச்சியில் கொண்ட பெரிய செங்கல் கட்டிடம் வளைவாகக் கட்டப்பெற்று சுவர் முழுவதும் புத்தரின் போதனைகள் பொறிக்கப்பட்டுள்ளன. சீனர் அமைத்துள்ள கோயிலும் உள்ளது. கலைக் கருவூலமாக விளங்கும் கலைக் கூடமும் இங்கே உள்ளது.

### இராமேஸ்வரம் காசியாத்திரை

உப்பூர் விநாயகரை வணங்கி, தேவிபட்டினத்தில் வழிபாடு செய்து, இராமேஸ்வரத்தில் கோடித் தீர்த்தமும், கடற்கரை மண்ணும் எடுத்துக் கொண்டு, காசியாத்திரை புறப்பட வேண்டும். இராமேஸ்வரக் கடற்கரை மண்ணைப் பிரயாகையில் சேர்த்து, கோடி தீர்த்தத்தால் காசி விசுவநாதப் பெருமானுக்கு நீராட்டுச் செய்ய வேண்டும். காசியிலிருந்து திரும்பியதும் கங்கை நீரால் இராமேஸ்வரப் பெருமானை நீராட்ட வேண்டும். கொல்லாமை, அருள், புலனடக்கம், பொறுமை, தவம், வாய்மை, அன்பு, அறிவு ஆகியவற்றுக்கு அடையாளமாகப் புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், நீலோற்பலம், பாதிரி, அலரி,

செந்தாமரை என்ற எட்டு மலர்களால் காசி விசுவநாதரையும், இராமநாதரையும் வழிபட வேண்டும். இதனால் பிறவாப் பெருவரம் கிடைக்கும்.

### இனிப் பாவம் செய்ய மாட்டேன்

காசியாத்திரையில் காலபைரவர் சந்நிதிக்குச் சென்று வழிபட்டுச் சொல்லிக் கொண்டு ஊருக்கு வருவது நிறைவான செயலாகக் கருதப்படுகிறது. அப்பொழுது காலபைரவர் சந்நிதியில் காசிக் கயிற்றைக் கங்கணமாகக் கட்டிக் கொள்ள வேண்டும். இனிப் பாவம் செய்ய மாட்டேன் என்றும் கங்கணம் கட்டிக் கொள்ள வேண்டும். பாவம் செய்யும் சூழ்நிலை வருமானால் காசிக் கயிற்றைப் பார்த்துக் கொள்ள வேண்டும். பைரவர் பாவம் செய்ய விடமாட்டார்.

### காசி இந்துப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்தத் துறை

பழங்காலத்தில் வடமொழியில் தேர்ச்சி பெற்ற அறிஞர் பெருமக்கள் ஒன்றாகக் கூடிச் சமயவாதம் நிகழ்த்திய இடம் காசி. அதனாலேயே மதன்மோகன் மாளவியா அவர்கள் காசியில் இந்துப் பல்கலைக் கழகத்தை நிறுவினார். அப்பொழுது திருப்பனந்தாள் காசிமடம் அளித்த நன்கொடையை ஏற்று, தமிழில் சைவசித்தாந்தத் துறையை ஏற்படுத்திப் பேராசிரியர் நிலையையும் ஏற்படுத்தித் தமிழுக்கும், சைவத்திற்கும் சிறப்பளித்தது பெரிதும் பாராட்டத்தக்கது.

### பரமஹம்ச யோகானந்தரும் காசியும்

மிகச்சிறந்த யோகியான பரமஹம்ச யோகானந்தர், இளம் வயதிலேயே காசிக்குச் சென்று பிரணாபானந்த சுவாமிகளின் அருள் பெற்றுக் காசியிலேயே தங்கி யோகப் பயிற்சிகளை மேற்கொண்டார். ஒரே நேரத்தில் பல உடம்புகளில் காட்சிதரும் சாதனை பெற்ற பிரணா பானந்த சுவமிகள், கீதையைப் பற்றிப் பிரணாப் கீதா என்ற நூலை இந்தியிலும், வங்காளியிலும் எழுதியவர்.

### அரிச்சந்திரனும் காசியும்

கதி இழக்கினும் கட்டுரை இழக்கிலோம் என்று சத்தியத்துக்காகவே வாழ்ந்த மாமன்னன் அரிச்சந்திரன். பொய்சொல்லா மெய்யனாக வாழ்ந்த அரிச்சந்திரன், வீரபாகு என்பவனிடம் அடிமையாகி, சுடுகாட்டைக் காக்கும் காவல்காரனாகப் பணியாற்றியதும், தன்மகன் லோகிதாசனைப் பாம்பு தீண்ட, அவன் பிணத்தைச் சந்திரமதி எரிக்கக் கொண்டு வந்த போது அரிசியும் பணமும் கேட்டதும் இங்கேதான் நிகழ்ந்தன. சந்திரமதி பணம் கொடுக்க முடியாதபோது உன் கழுத்துத் தாலியை விற்றுக் கொடு என்கிறான் அரிச்சந்திரன். இந்தத்தாலி என் கணவனைத்

தவிர வேறு யார் கண்ணுக்கும் தெரியாதே. இப்பொழுது சுடுகாட்டுக் காவல்காரன் கண்ணில் பட்டுவிட்டதே. இது என்ன ? பொற்புப்போம். பொறைபோம். எந்தன் கற்புப் போவதென் ? என்று கலங்கினாள் சந்திரமதி. அரிச்சந்திரன் மனைவியை அறிய, அரிச்சந்திரன் புகழை உலகம் அறிந்த இடம் காசியம்பதி. இந்த மயானப் பகுதி, கங்கைக்கரையில் அரிச்சந்திராகாட் என்று கூறப்படுகிறது. இங்கும் பிணங்கள் வரிசையாக எரிந்து கொண்டிருக்கின்றன. பிணவாடை கொஞ்சம் கூட இருக்காது.

## பிற செய்திகள்

1. மனித உடம்பில் ஆறு ஆதாரங்கள் இருப்பது போல இந்தியாவிலும் ஆறு ஆதாரங்கள் உள்ளன.

| | | |
|---|---|---|
| மூலாதாரம் | – | கன்யாகுமரி |
| சுவாதிட்டானம் | – | மதுரை |
| மணிபூரகம் | – | சிதம்பரம் |
| அனாகதம் | – | காசி |
| விசுத்தி | – | ஹரித்வார் |
| ஆக்ஞை | – | கேதாரம் |

உச்சந்தலையில் உள்ள சஹஸ்ராரம் கயிலைமலை. இது சுவாமி சித்பவானந்தாவின் கருத்து. மனித உடம்பில் தலைப்பாகம் வடக்கு. இடதுகைப்பக்கம் கிழக்கு. இதயம் உடம்பின் வடகிழக்குப் பகுதியில்தான் இருக்கிறது. இது போலவே காசி விஸ்வநாதரும் வடகிழக்கு மூலையில் காட்சியளிக்கிறார். இதயத்தில் ஒளிவிடும் ஆன்மாவைப்போல, பெரியமூர்த்தி, சிறிய கோவிலில் காட்சியளிக்கிறார். காசித்தலம் முழுவதும் காசிப் பெருமான் அருள்திருமேனி. அந்தத் திருமேனியின் இதயப்பகுதி விசுவநாதர் திருக்கோவில். எனவே இது அனாகதத்தானமாகக் கருதப்படுகிறது. அனாகதம் என்பது இதயப்பகுதியின் பின்புறம் முதுகுத்தண்டில் உள்ள ஆதாரம்.

2. ஏழாம் நூற்றாண்டில் இந்தியாவுக்கு வந்த சீனயாத்திரிகர் யுவான்சுவாங் காசி விசுவநாதர் கோவில் மணிகர்ணிகா கட்டத்திற்கு அருகில் இருந்ததாகக் குறிப்பிடுகிறார். காசி கண்டம் என்ற நூலில் "விசுவநாதர் கோவில் ஞானவாபி என்ற கிணற்றுக்கு அருகில் இருந்தது" எனக்குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த இடத்தில் இப்பொழுது மசூதி அமைந்துள்ளது. இப்பொழுதிருக்கும் கோவில் 1777ல் இந்தூர்ராணி அகல்யாபாயினால் கட்டப்பட்டது.

3. அன்னக்கொடி கட்டும் அன்னபூரணி

விசுவநாதர் திருக்கோவிலுக்கு அருகில் அன்னபூரணி ஆலயம் உள்ளது. மேற்கு நோக்கிக் காட்சிதரும் அன்னபூரணி ஒரு கையில் கரண்டியையும் ஒரு கையில் அன்னப் பாத்திரத்தையும் ஏந்தி நிற்கிறாள். இந்த ஆலயத்தில் உள்ள தங்க அன்னபூரணியின் திருவுருவம் மிக நேர்த்தியானது. தீபாவளி நாளில் தங்க அன்னபூரணியைத் தரிசிக்கலாம். இக்கோவிலுக்கு அருகில் இதையொட்டியுள்ள ஆலயத்தில் காளி, நரசிம்மர், கங்கையைத் தாங்கிய கண்ணுதல், திருமுடி சூடிய சீதாராமன், ராதாகிருஷ்ணன், ஆகியோர் திருவுருவங்கள் மிக அழகாகக் காட்சி தருகின்றன. இங்கே உள்ள சிவபெருமான் மீசையோடு காட்சி தருகிறார். இவரைப் பார்க்கும் பொழுது திருவல்லிக்கேணிப் பார்த்தசாரதிப் பெருமான் மீசையோடு காட்சியளிப்பதும்

இந்திரன் சிறுவன் தேர்முன் நின்றானைத்
திருவல்லிக் கேணிக் கண்டேனே

என்று திருமங்கையாழ்வார் பாடியதும் நினைவுக்கு வருகின்றன.

காசித் திருத்தலத்தில் விசுவநாதப் பெருமானுக்கே அருட்சோறளிக்கும் அன்னையாக அன்னபூரணி காட்சியளிக்கிறாள். ஒரு பெண் தன் கணவனுக்குத் தாரமாக மட்டுமன்றிப் பலசமயங்களில் தாயாகவும் இருக்க வேண்டும் என்பதை இது காட்டுகிறது. பிச்சை ஏற்கும் பெருமான் முன்னால் நிற்க, பிச்சை போடும் அன்னபூரணி பெருமிதத்தோடு காட்சிதரும் திருக்கோலத்தை இங்கே தரிசிக்கலாம். இதைப் பார்க்கும்பொழுது "இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் மகன் தகப்பன்" என்று திருவாசகத்தில் மணிவாசகர் பாடியது மனத்தில் தோன்றுகிறது. அவன் கொடுத்த நாழிநெல்லை வைத்துக் கொண்டு, அவனுக்கும் சோறு போட்டு, உலகமக்களுக்கெல்லாம் சோறிட்டு, முப்பத்திரண்டு அறங்களும் செய்பவள் பராசக்தி. இப்படியொரு மனைவி அமையச் சிவபெருமான் எவ்வளவு காலம் கல்லாலின் கீழமர்ந்து தவம் செய்திருக்க வேண்டும்! இந்த அன்னபூரணியை வழிபட்டால் இகத்திலும் பரத்திலும் பெருவாழ்வளிப்பாள்.

அவளை ஒழிய அமரரும் இல்லை
அவளன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை
அவளன்றி ஐவரால் ஆவதொன் றில்லை
அவளன்றி ஊர்புகும் ஆறறி யேனே

என்பது திருமந்திரம். இவளுக்கு முன்னால் "மேரு" வைத்து அர்ச்சிக்கப்படுகிறது. இப்பெருமாட்டியை வணங்கி, அவள்தந்த செல்வத்தை, அவள் சந்நிதியில் பலருக்கும் அன்னதானமாகச் செய்து அவளருள் பெறுவோம்.

4. காசித் தலத்தில் ஒரேநாளில் பத்து இடங்களைத் தரிசிக்க வேண்டும் என்பது மரபு. அந்தப் புனிதமான இடங்களைக் கீழ்க்கண்டபடி வரிசைப் படுத்தலாம்.

**1. விசுவேசம்** – இது விசுவநாதர் சந்நிதி. முதல் வழிபாடு இவருக்கே.

**2. மாதவம்** – கங்கையில் பஞ்சகங்கா கட்டத்திற்கு அருகில் உள்ள இக்கோவிலில் பிந்து மாதவர் எழுந்தருளி இருக்கிறார். பிந்து மாதவராகிய கண்ணபிரான் பூசித்த சிவலிங்கமும் இங்கே உள்ளது. இராமேஸ்வரத்தில் சேது மாதவரை வணங்கிப் பிரயாகையில் வேணி மாதவரை வழிபட்டு, காசியில் பிந்து மாதவரைக் கண்டு தொழ வேண்டும்.

**3. துண்டி** – விசுவநாதர் ஆலயத்துக்கு முன்னர். துண்டிவிநாயகர் எழுந்தருளும் இடம் துண்டி எனப்படும். "வேழமுகமும் விளங்குசெந்தூரமும்" ஆக இந்த விநாயகர் அருட்காட்சியளிக்கிறார்.

**4. தண்டபாணி** – விசுவநாதர் கோவிலுக்கு வடகிழக்கில் சுமார் ஒன்றரைக் கிலோமீட்டர் தூரத்தில் தண்டபாணி கோவில் உள்ளது. தூண் ஒன்றில் சிறிய பெருந்தகையாகத் தண்டபாணி காட்சியளிக்கிறார். காசியில் முருகன் கோவில், முருகன் சந்நிதி ஆகியவற்றைக் காண்பது அரிது. நகரச் சத்திரத்தில் செந்தமிழ் கேட்கும் திருமுருகன் அழகாகக் காட்சியளிக்கக் காணலாம்.

**5. பைரவம்** – இது கால பைரவர் சந்நிதி. தண்டபாணி கோவிலும் காலபைரவர் கோவிலும் பக்கத்தில் உள்ளன. கால பைரவர்தான் காசிக்குக் காவல் துறை மேலதிகாரி. இவரைப் பிடித்துக்கொண்டால், நம்மிடம் எமன் கூடப் பயப்படுவான். காசியில் எமனுக்கு அதிகார மில்லை.

**6. வந்தே காசி** – காலபைரவர் சந்நிதிக்கு மேற்குப் பக்கம், சற்றுத் தூரத்தில் வந்தே காசி என்ற இடம் உள்ளது. ஓர் ஆலமரமும் அதன் கீழ் ஒரு தேவியின் கோவிலும் உள்ளன.

**7. குகா** – 'வந்தே காசி" என்ற இடத்திற்கு மேற்கில் குகா என்ற இடம் உள்ளது. இங்கே ஒரு குகையும் சிவலிங்கமும் உள்ளன.

**8. கங்கா** – காசியில் உள்ள ஒரு குளம் கங்கா என்று அழைக்கப்படுகிறது. இதை ஆதிகங்கை என்று பாராட்டுகிறார்கள். இதன் கரையில் முப்பெருந்தேவியர் உள்ளனர்.

**9. பவானி** – இது அன்னபூரணி திருக்கோவில். விசுவநாதர் கோவிலுக்கு அருகில் உள்ளது.

**10. மணிகர்ணிகை** – இது கங்கையில் உள்ள புகழ்மிக்க தீர்த்தகட்டம். இங்கேதான் இறந்த உயிர்களுக்குச் சிவபெருமான் தாரக மந்திரம் உபதேசிக்கிறார். இரவில் கடைசியாக இங்கே வைக்கப்படும் பிணம் எரிந்தபின், மறுநாள் அதிகாலை மூன்றுமணிக்கு, அப்பிணத்தின் வெண்ணிறச் சாம்பல், விசுவநாதருக்கு அபிஷேகமாகிறது.

காசியில் இவை அனைத்தையும் பார்க்க வேண்டும். அதற்குத்தக்கபடி திட்டமிட்டுக் கொள்ளவேண்டும். காசி விசுவநாதர் கோவிலுக்குத் தெற்கிலும் பல ஆலயங்கள் உள்ளன. இவற்றை வழிபடுவது தட்சிணயாத்திரை எனப்படும். இவற்றுள் திலபாண்டீசுவரர் ஆலயம், கேதாரநாதர் ஆலயம், அரிச்சந்திரகட்டம், வராகியம்மன் கோவில், துர்க்காதேவி ஆலயம், கௌடியம்மை கோவில், பிர்லா மந்திர் துளசிதாசர் கோவில் ஆகியவை குறிப்பிடத்தக்கவை. இந்த ஆலயங்களில் புகழ்மிக்கது திலபாண்டீசுவரர் கோவில. இங்கே மிகப்பெரிய சிவலிங்கம் உள்ளது. திலம் என்றால் எள். இச்சிவலிங்கம் நாள்தோறும் எள் அளவிற்கு வளர்வதாகக் கூறப்படுகிறது இங்கே ஆழமான பள்ளத்தில் உள்ள சிவலிங்கம் பாதாள ஈசுவரர் என்ற பெயரில் அழைக்கப்படுகிறது.

கேதார கட்டத்தில் உள்ள கேதாரநாதர் கோவிலில் சிவபெருமான் மலைக்கல்லில் தோன்றிய மகாதேவனாக, சுயம்புவாக வீற்றிருக்கிறார்.

அனுமன் காசிக்கு வந்து சிவலிங்கத்தை எடுத்த இடம் அனுமான்காட் என்று அழைக்கப்படும் பகுதி. இங்கே ஓர் அனுமார் கோவில் உள்ளது. நம் பகுதியில் பிள்ளையார் கோவில்கள் இருப்பது போலக் காசியில் எப்பக்கம் பார்த்தாலும் அப்பக்கம் ஓர் அனுமார் கோவில் இருக்கும்.

வராகியம்மன் கோவில் விசாலாட்சி கட்டத்துக்கு அருகில் ஒரு சிறிய சந்தில் உள்ளது. இக்கோவிலில் காலை 4 மணி முதல் 6 மணி வரை வழிபாடு நிகழும். அதன்பிறகு பூட்டிவிடுவார்கள்.

காசியில் சுமார் 56000 சந்துகள் இருப்பதாகக் கூறப்படுகிறது. வழிதெரியாமல் சிக்கிக் கொண்டவர்கள் வாழ்க்கை முழுவதும் சந்துகளைச் சுற்றிக் கொண்டே இருக்க வேண்டியது தான்.

5. துண்டி விநாயகர்

காசி விஸ்வநாதர் சந்நிதிக்குப் போகும் வழியில் சிறுகோவிலில் பெரிய உருவத்தோடும் பெருங்கருணையோடும் வீற்றிருப்பவர் காசியின் முதற்பெருங்கடவுளான துண்டி விநாயகர் இவர் செந்தூர நிறத்தினர் இவரை டுண்டி விநாயகர் என்று குறிப்பதுண்டு கந்தபுராணத்தில் காசி கண்டத்தில்

நான்காவது பகுதியில் ஐம்பத்தி ஏழாவது அத்தியாயத்தில் சிவபெருமான் டுண்டி விநாயகரை வழிபட்டுப் பாடிய தோத்திரம் இடம்பெற்றுள்ளது. இது இருபத்தொரு பாடல்களைக் கொண்டது. வடமொழியில் அமைந்தது. "டுடி என்றால் நாடுவது என்று பொருள். எல்லாவற்றையும் பெறுவதற்காக, எல்லோரும் இவரை நாடுவதால் இவர் டுண்டி விநாயகர் ஆகிறார். இவர் விரும்பினாலன்றி யாரும் காசிக்குள் நுழையமுடியாது". என்று 17ஆவது பாடல் கூறுகிறது.

அன்வேஷணே டுடுடிரயம் ப்ரதிதோஸ்தி தாது
சர்வார்த்த டுண்டிததயா தவருண்டி நாம
காசீப்ரவேஷ மபிகோ லபதேத்ர தேஹீ
தோஷம் வினாதவ விநாயக டுண்டி ராஜ

என்பது அப்பாடல். 18 ஆவது பாடல் "யாரொருவர் டுண்டிவிநாயகர் பாதம் வணங்கி என்னை வணங்குகிறாரோ அவருடைய செவியில் புகுந்து. அவர் இறப்பதற்கு முன், அவருக்கு நான் உபதேசிக்கிறேன். அவருக்கு மறுபிறப்பில்லை என்று சிவபெருமான் கூறுவதாக அமைந்துள்ளது.

டுண்டே ப்ரணம்ய புரதஸ்தவ பாதபத்மம்
யோமம் நமஸ்யதி புமாநிஹ காசி வாஸு
த்தகர்ண மூலதிகம்ய புராதிஷாமி
தத்கிர்கி தத்ர நபுனர்பவ தாஸ்தி யேன (பாடல் 18)

டுண்டி விநாயகர் ஆலயத்துக்கு அருகில் ஒரு மாடியில் பஞ்சமுக விநாயகரும் பஞ்சலிங்கங்களும் காட்சியளிக்கக் காண்கிறோம். காசி விசுவநாதர் ஆலயத்துக்கு வரும் வழியில் டுண்டி விநாயகருக்கு முன்னர், சாட்சி விநாயகர் கோவில் உள்ளது. இவர் கிழக்கு நோக்கி அமர்ந்துள்ளார். இந்தச் சந்நிதிக்கு முன்னால் தனியாக ஒரு சகஸ்ரலிங்கம் உள்ளது. காலை நேரத்தில் கடைகள் திறக்கப்படுவதற்கு முன் இந்த லிங்கத்தை வழிபடலாம். கடைக்காரர்கள் கடைகளைத் திறந்து வைத்தபின் மிகவும் உன்னிப்பாகக் கூர்ந்து நோக்கினால் தான் சகஸ்ரலிங்கத்தைத் தரிசிக்கலாம். காலையில் கங்கையில் நீராடி, கண்ணுதற் பெருமானை நினைந்து நீராடி, ஈர ஆடை உடம்பில் இருக்க, எம்பிரான் நினைப்பு மனத்தில் இருக்க, கைகளில் கங்கையும் வில்வமும் நாமே ஏந்திவந்து, இந்த சகஸ்ரலிங்கத்துக்கு அபிடேகம் செய்து ஏக வில்வம் சிவார்ப்பணம் என்று வில்வத்தைச் சார்த்தி வழிபட்டு, சிவபுராணம் சொல்லிக்கும்பிடும் போது கிடைக்கும் நிம்மதி கோடிப் பணத்தைக் கொட்டிக் கொடுத்தாலும் கிடைக்காது. இது கொடுத்துவைத்தவர்களுக்குக் கிடைக்கும். நீர்த்துறையும் அம்பலமும் காத்திருந்தால் தானே கிடைக்கும்.

## கால பைரவரும் காசியும்

சிவபெருமான், வலிமைமிக்க ஞான மூர்த்தியாகப் பைரவரை உற்பத்தி செய்து அவரிடம் உலகைக்காக்கும் பொறுப்பை அளித்தார். காசி காலபைரவரின் திருத்தலம் இந்தப் பைரவ மூர்த்தியைக் காசி ரகசியம் என்ற நூலில் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை

தளம்பொலி மலரோன் ஆதி வானவர் தாழ்ந்து போற்ற
உளம்பொலி காசி மேவும் உயிர்கள்செய் பாவமெல்லாம்
களம்பொலி யாது தண்டம் கண்டற வொழிந்து முக்தி
வளம்பொலி வகைசெய் கால வயிரவற்கு அன்பு செய்வாம்

என்று போற்றுகிறார். காசிக் காலபைரவரை வழிபட்டால் நம்முடைய தீய குணங்கள் நீங்கும். இங்குள்ள காலபைரவர் கோவிலில் உள்ள திருமேனி கடுமையான தோற்றமுடைய வேகவடிவமாகும். காசிக்கு இவர் காவல் தெய்வம். இவருக்கு எட்டுத்திசையிலும் கோவில் உண்டு. கங்கைக் கரையின் 64 கட்டங்களிலும் 64 பைரவர்கள் விளங்குகிறார்கள். காசியில் வாழ்பவர் கணக்கைச் சித்திரகுப்தர் எழுதுவதில்லை. பைரவரே எழுதுகிறார். மிருத்யுஞ்சய மந்திரப் பலன், இவரை வழிபட்டால் கிடைக்கும். அஷ்டமி இவருக்குச் சிறப்பான நாள். இக்கோவிலில் நாம் கொண்டு செல்லும் கருப்புப்பட்டுக்கயிற்றை, கோவில் பண்டாக்கள், மிருத்யுஞ்சய மந்திரம் ஓதி, பைரவர் திருவடியில் வைத்துக்கொடுப்பர். மயில் தோகையினால் பக்தர்களைத் தொட்டும், முதுகில் தட்டியும், துர்க்குண தேவதைகளின் செயல்பாடுகளை நீக்குவர்.

## கவிதையும் காசிநாதரும்

காசிப் பெருமான் திருவருள்பெற என்ன செய்ய வேண்டும்! நல்ல கவிதை பாடுங்கள். அப்பெருமான் பாட்டுக்கு மகிழும் பரமன். தமிழை விரும்பும் தலைவன். (கவிதை கிடைத்தால் போதும். அப்பெருமான் கட்டிய மனைவிபால் மட்டுமல்ல – காதலியிடத்தும் தூதுபோவான்). சுந்தரமூர்த்தியின் கவிதை கேட்ட திருச்செவியால் என் கவிதையையும் கேட்டு என்னை ஆட்கொண்டான் காசிநாதன் என்று பேசுகிறார் குமரகுருபரர்.

தூதுகொண்டுந் தமைத் தோழமைகொண்ட
    தொண்டர் தண்டமிழ்ச் சொற்கொண்ட குண்டலக்
காது கொண்டுளங் கவிதைகொண்டு ஆட்கொண்ட
    காசிநாதர் கருத்தேது அறிகிலோம்

போது கொண்டாடு பச்சிலை கொண்டுதாம்
　　பூசை செய்திலர் புண்டரிகப்பதம்
ஏதுகொண்டு கொடுப்பர் ? கொடுப்பரேல்
　　இருவருக்குமற்று என்படும் நெஞ்சமே

என்பது காசிக்கலம்பகம். "பூசை செய்யாவிட்டாலும் இந்த ஊரில் இறந்தாலேயே தன்திருவடிப்பேற்றைக் காசிநாதர் தருவாரானால், பலகாலமாகத் தவம் செய்யும் பிரமனும் திருமாலும் என்னபாடு படுவார்கள் ?" என்று கேட்கும் நயம் வியந்து பாராட்டத்தக்கதல்லவா!

## காசிக்குப்போனால் யாரோடு போக வேண்டும்?

காசிக்குப் போகும்பொழுது அறிஞர்கள் கூட்டத்தோடு போக வேண்டும் என்று குமரகுருபரர் குறிப்பிடுகிறார். இது முத்தித்தலம். இங்கே வேறு சிந்தனைகளுக்கு இடமில்லை. பணம், பதவி, படிப்பு எல்லாவற்றையும் மறந்துவிடுங்கள். உரைமுதிர்ந்தவர் குழாத்தொடும் செல்லுங்கள் நரைவந்தது; கண் போயிற்று; எமன் நம் வீட்டின் முகவரியைத் தெரிந்து கொண்டுவிட்டான். நரையொடு திரையும் வந்தது என்று கவலைப்படாமல் காசிக்கு வாருங்கள். விசுவநாதன் பார்த்துக் கொள்வான்.

நரைமுதிர்ந்தன; கண்கள் பஞ்சார்ந்தன;
　　நமன் தமர் வழிக்கொண்டார்
திரைமுதிர்ந்துடல் திரங்கினது, இரங்கலை
　　செயல் இது மடநெஞ்சே!
உரைமுதிர்ந்தவர் குழாத்தொடும் அடைதியால்
　　ஒழுகொளி முடிக்கங்கைக்
கரைமுதிர்ந்திடாக் கலைமதி முடித்தவர்
　　காசிநன் கைர்தானே

என்பது காசிக்கலம்பகம். அறிஞர் கூட்டம் பக்தி நூல்களைப் பேசும். இதனால் பக்தி பெருகும். அவர்களோடு போனால் விசுவநாதன் நம்மையும் ஆட்கொள்வான். குமரகுருபரர் கூறிய வழியில் அறிஞர் பின் செல்வோம், அவனருள் பெறுவோம்.

*கங்கையைச் சடையில் தாங்கும் கருணைவிஸ் வேசா போற்றி*
*மங்கையாய் அகிலம் காத்து வளர்விசா லாட்சி போற்றி*
*பொங்கிடும் அமுதாம் அன்ன பூரணித் தாயே போற்றி*
*கங்கணக் கயிறு நல்கும் காலபை ரவரே போற்றி.*

# II - கங்கை நதி

சுறைக்கண்டன் சடைக்காட்டில் குடியிருக்கும் அன்னம் கங்கைநதி. "ஆற்றினுக்கு அரசாம் கங்கை" என்று திருவிளையாடல் புராணம் பாராட்டும் கங்கை இந்திய நாட்டின் புண்ணிய நதிகளில் தலையாயது. கங்கைத் தீர்த்தத்தைச் சிறிதளவாவது அருந்தியவனுக்கு யமபயம் இல்லை என்று பஜகோவிந்தத்தில் ஆதிசங்கரர் குறிப்பிடுகிறார். இதனாலேயே இறக்கும் தருவாயில் உள்ளவர்களுக்குக் கங்கைத் தீர்த்தத்தை வாயில் ஊற்றுவதும் கண்களில் தேய்த்துவிடுவதும் உண்டு. நகரத்தார் அனைவரும் வீடுகளில் கங்கைச் செம்பில் கங்கை வைத்திருப்பார்கள்.

கீதையில் கண்ணன் "நதிகளில் நான் கங்கையாக" இருக்கிறேன் என்று கூறுகிறார். இந்தியாவின் மிகப்பெரிய ஆறு கங்கை. உலகப் பெரிய ஆறுகளில் ஒன்று. தென் இமயமலையில் கங்கோத்ரி என்னும் இடத்தில், கடல் மட்டத்திலிருந்து 13800 அடி உயரத்தில், பனிக்குகையில் தோன்றிப் பரவசமூட்டும் கங்கையைப் பார்த்தாலே பாவம் போகும். தோன்றும் இடத்தில் இது பாகீரதி எனப்படுகிறது. பிறகு ஜான்ஹவி, அலக்நந்தா ஆகிய ஆறுகள் சேர்ந்து கங்கையாகிறது. அகி என்னும் இடத்தில் இமயமலையைத் துளைத்துக்கொண்டு, தென்மேற்கில் திரும்பி ஹரித்துவாரை அடைகிறது. பரூக்காபாத் மாவட்டத்தில் ராமகங்கா ஆறு கலக்கிறது. பிரயாகையில் யமுனை வந்து சேர்கிறது. காசியில் வடக்கு நோக்கிச் சென்று, வங்காளத்தின் எல்லைகளைத் தொட்டு, ராஜ்மகால் குன்றுகளைத்தாண்டி, பல கிளைகளாகப் பிரிந்து வங்காள விரிகுடாவிற்கு 480 கிலோ மீட்டரில் கழிமுகங்களாக அமைகிறது. கங்கையின் மொத்த நீளம் சுமார் 2500 கிலோ மீட்டராகும்.

### புராணப் பெருமை

இந்து மதத்தின் உயிர்நாடி கங்கை. இந்திய நதிகள் எல்லாவற்றுக்கும் இதுவே பிரதிநிதி. பலநதிகள் கங்கையில் பெயரால் அழைக்கப்படுகின்றன. எல்லா மங்கள ஸ்நானங்களும் "கங்கா ஸ்நானம்" என்றே அழைக்கப்படுகின்றன. மக்கள் செய்த பாவங்களைக் கழுவி, அவர்களுக்குத் தூய்மையையும், பேரறிவையும் வீட்டின் பத்தையும் அளிக்க வல்லது கங்கை. இதனாலேயே பாரதியார்

இன்னரு நீர்க்கங்கை யாறெங்கள் ஆறே
இங்கிதன் மாண்புக்கு எதிர்எது வேறே

என்று கங்கையைப் பாடிப் பரவினார். வாழ்வின் இறுதியைக் கங்கைக் கரையில் கழிக்க வேண்டும் என்று இந்துக்கள் விரும்புகின்றனர். வானத்திலிருந்து மண்ணில் இறங்கிப் பாதாளத்துக்குச் சென்றதால் கங்கையை "திரிபதகா" (மூன்று வழிகளில் செல்பவள்) என்று போற்றுகிறார்கள்.

கங்கையின் வரலாறு வால்மீகி ராமாயணத்தில் பாலகாண்டத்தில் 35 ஆவது சர்க்கத்திலும் 37 முதல் 44 ஆவது சர்க்கங்களிலும் கூறப்பட்டுள்ளது. மலையரசனான இமவானுக்கும் மேருவின் மகளான மனோரமைக்கும் கங்கை என்ற பெண்ணும் உமை என்ற பெண்ணும் பிறந்தனர். தங்களுடைய வழிபாட்டுக்கு உதவியாக மூத்தபெண் கங்கையைத் தேவர்கள் கேட்க, இமவான் கொடுத்தனுப்பினான். இளையவள் உமை சங்கரனை மணந்து கொண்டாள். அயோத்தி மன்னன் சகரன் அசுவமேதயாகம் செய்யத் தொடங்கினான். தேவேந்திரன் யாகக்குதிரையைத் திருடிக்கொண்டு போய்ப் பாதாளத்தில் தவமியற்றும் கபிலமுனிவரின் பக்கத்தில் கட்டிவைத்து விட்டான். சகரனுடைய அறுபதினாயிரம் பிள்ளைகளும் குதிரையைத் தேடிப் பாதாளம் சென்று குதிரையைக் கண்டனர். கபிலமுனிவரே குதிரையைத் திருடியவர் என்றெண்ணி அவரைத் தாக்க ஓடி வந்தனர். கபிலர் அவர்களைப் பார்வையால் எரித்துச் சாம்பலாக்கினார். சகரன், தன் மூத்தமனைவியின் மைந்தன் அசமஞ்சனின் மகனான அம்சுமானை அனுப்பிக் குதிரையையும் காணாமல் போன தன் மக்களையும் தேடச் செய்தான். அம்சுமான் பாதாள லோகம் சென்றான். சகரபுத்திரர் சாம்பலானதை அறிந்தான். கங்கையைக் கொண்டு வந்தால் சாம்பல் குவியலைக் கரைத்து இறந்தவர்களின் ஆன்மாவைக் கடைத்தேற்றலாம் என்றும் அறிந்துகொண்டான். குதிரையைக் கொண்டுவந்தான். வேள்வி முடிந்தது. அம்சுமானும் அவன் மகன் திலீபனும் அரசாட்சியை ஏற்றனர். கங்கையைக் கொண்டுவர முடியவில்லை. திலீபன் மகன் பகீரதன் தவத்தால் பிரமனையும் சிவபெருமானையும் மகிழச் செய்தான். கங்கையைக் கொண்டுவர ஏற்பாடு செய்தான். அவள் வானிலிருந்து விழும்போது, அவள் வேகத்தைத் தாங்கும் ஆற்றல் பெற்றவர் சிவபெருமான் ஒருவரே என்பதால் மீண்டும் அவரைக் குறித்துக் கடுந்தவம் செய்து கங்கையைத் தாங்க வரம் கேட்டான். கங்கை இறங்கினாள். சிவன் என்னைத் தாங்குவதா ? அவனையும் இழுத்துக்கொண்டு பாதாள லோகத்திற்குச் செல்லப் போகிறேன் என்று

இறுமாப்போடு மிக வேகமாக விழுந்தாள். சிவபிரான் அவளைத் தன் சடையில் ஒரு பகுதியில் அடக்கிக்கொள்ள, பகீரதன் மீண்டும் தவம் செய்தான். சிவபிரான், அவன் தவத்திற்கிரங்கி ஏழு அருவிகளாகக் கங்கையை விடுவித்தார். இந்த ஏழு அருவிகளில் மூன்று கிழக்குமுகமாய் விழுந்தோடின. மூன்று மேற்கு முகமாய்ப் பாய்ந்தன. ஏழாவது அருவி பகீரதன் பின்னால் வந்தது. வரும் வழியில் கட்டுக்கடங்காத வேகத்துடன் ஜன்ஹீமுனிவரின் வேள்விக் கூடத்தில் பாய்ந்தது. அவர் கங்கையைக் காதில் அடக்கிக் கொண்டார். மீண்டும் பகீரதன் வேண்ட, காதுவழியே கங்கையை விட்டார். ஜன்ஹீமுனிவர் விட்டதால் அது ஜான்ஹவி என்று பெயர் பெற்றது. இவ்வாறாகப் பெரும் பாடுபட்டுக் கங்கையைக் கொண்டு வந்த பகீரதன் அதைப் பாதாள லோகத்தில் தன் முன்னோர்களின் அஸ்திகளின் மீது பாயச் செய்து அவர்களைக் கடைத்தேற்றினான். இவ்வளவு சிரமப்பட்டுப் பகீரதன் கங்கையைக் கொண்டு வந்ததால், பெருமுயற்சி எடுத்துச் செய்யும் பெரிய செயல்களைப் பகீரதப் பிரயத்தனம் என்று உலக மக்கள் கூறத்தொடங்கினர். கங்கை புகழ்பெற்ற புண்ணிய நதியாயிற்று. அதுவரை தெற்குநோக்கி ஓடிய கங்கை காசியில் வடக்கு நோக்கி ஓடுகிறது. தெற்கு நோக்கிப் போவது மரணயாத்திரை. வடக்கு நோக்கிப் போவது சரணயாத்திரை. காசிக்கங்கை இதனால் உத்தரவாகினி என்று போற்றப்படுகிறது. கங்கையில் உடலை விடுவது மிகமிகப் புனிதமானதாகக் கருதப்படுகிறது. துளசிராமாயணம் எனப்படும் இராமசரிதமானஸ் என்ற அமர காவியத்தை இந்தியில் எழுதி வழங்கிய துளசிதாசர் கங்கையில் ஆசி நதி சேரும் அஸ்காட் பகுதியில் மறைந்தார். இது ஜலசமாதி எனப்படும். முருகப்பெருமானைத்தாங்கியவள் கங்கை. பீஷ்மரைப் பெற்றவள் கங்கை. எனவே இருவரையும் காங்கேயர் என்றழைக்கிறோம்.

கங்கைக்கரையில் தங்கிப் பல சித்தர்கள் தவமிருந்து சிவம் பெறுவதால் இதைச் சித்தநதி என்பதும் உண்டு.

## கங்கைக்குப் பிறந்த நாள்

*கங்கை வானிலிருந்து கீழே இறங்கிய நாள் வைகாசி மாதம் சுக்கில பட்சம், திருதியை திதி, அஸ்த நட்சத்திரம், செவ்வாய்க்கிழமை என்று கூறப்படுகிறது.*

கங்கை உற்பத்தியாகும் இடமான கங்கோத்ரியும், கங்கை தென்படும் இடமான கங்காத்வாரம் எனப்படும் ஹரித்வாரும், கங்கை வடக்கு நோக்கி ஓடும் காசியும், யமுனையோடு சேரும் திரிவேணி சங்கமமும், கங்கையை ஒட்டி ஏற்பட்ட தலங்களில் மிகச் சிறப்பானவை.

கங்கை நீரைச் செம்பில் அடைத்து வீட்டில் வைத்துப் பூஜை செய்வதுண்டு. கங்கை நீர் யாத்ரீகர்கள் மூலம் நாள்தோறும் இராமேஸ்வரத்தில் இராமநாதருக்கு அபிடேகம் ஆகி வருகிறது. கங்கை, காயத்ரி, கீதை இம்மூன்று ககாரங்களுக்கு மேலான ககாரம் இல்லை என்று ஒரு வடமொழி சுலோகம் கூறுகிறது.

மனித உடம்பில் இடகலை, பிங்கலை, சுழிமுனை என மூன்று நாடிகள் யோகப் பயிற்சிக்கு முக்கியமானவை. புருவமத்தியில் இவை இணைகின்றன. இவையே கங்கை, யமுனை, சரஸ்வதி என்று கூறப்படுகின்றன.

### இலக்கியங்களில் கங்கை

சிவபெருமான் திருமுடியில் திகழும் கங்கை வடநாட்டுப் பகுதிகளில் மண்ணில் ஓடிக்கொண்டிருக்கிறாள். தமிழ்நாட்டு மக்கள் மனத்தில் ஓடிக்கொண்டிருக்கிறாள். தமிழ் இலக்கியங்கள் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாகக் கங்கையை புகழ்ந்து பாடிக்கொண்டிருக்கின்றன.

கங்கை வாரியும் காவிரிப் பயனும்
ஈழத் துணவும் காழகத் தாக்கமும்

காவிரிப் பூம்பட்டினத்துறை முகங்களில் வணிகப் பொருட்கள் ஆயின என்று பட்டினப்பாலை பேசுகிறது. பெரும்பாணாற்றுப்படை

இமையவர் உறையும் சிமயச் செவ்வரை
வெண்திரை கிழித்த விளங்குசுடர் நெடுங்கோட்டுப்
பொன்கொழித்து இழிதரும் போக்கரும் கங்கை

என்று பாராட்டுகிறது. சிலப்பதிகாரத்தில் மாடலமறையவன் கங்கையாடச் சென்ற செய்தி உள்ளது. சேரன் செங்குட்டுவன் இமயத்தில் கல்எடுத்துக் கொண்டு வந்து கங்கை நீராட்டிப் பத்தினித் தெய்வத்தைப் பாடிப் பரவினான். தன் தாயைக் கங்கை நீராடச் செய்து புண்ணியமும் சேர்த்துக்கொண்டான்.

கங்கைப் பேர்யாற்றுக் கடும்புனல் நீத்தம்
எங்கோ மகளை ஆட்டிய அந்நாள்
ஆரிய மன்னர் ஈரைஞ் நூற்றுவர்க்கு
ஒருநீ யாகிய செருவெங் கோலம்
கண்விழித்துக் கண்டது கடுங்கண் கூற்றம்

என்று செங்குட்டுவனின் முதல் வெற்றியை அமைச்சன் வில்லவன் கோதை விண்வியக்கப் புகழ்கிறான். அடுத்த வெற்றி

செங்குட்டுவன்தன் சினவேல் தானையொடு
கங்கைப் பேர்யாற்றுக் கரையகம் புகுந்து
பாற்படு மரபிற் பத்தினிக் கடவுளை
நூற்றிறன் மாக்களின் நீர்ப்படை செய்து

என்று பேசப்படுகிறது. மாதவி மடந்தை கானல் பாணி, கனகவிசயர்தம் முடித்தலை நெரித்த வரலாற்றில் பல இடங்களில் கங்கையின் பெருமை பேசப்படுகிறது. பிற்காலத்தில் இராஜேந்திர சோழன் கங்கை கொண்ட சோழன் என்று போற்றப்பட்டான்.

கங்கை நதியும் கடாரமும் கைக்கொண்டு
சிங்கா தனத்திருந்த செம்பியன்

என்று தமிழ்பாடியது. கலிங்கத்துப்பரணி, முதலாம் குலோத்துங்கனைப் பேய்கள் வாழ்த்தின என்று கூறிப்

பொன்னித் துறைவனை வாழ்த்தினவே
பொருநைக் கரையனை வாழ்த்தினவே
கன்னிக் கொழுநனை வாழ்த்தினவே
கங்கை மணாளனை வாழ்த்தினவே

என்று பேய்கள் வாழ்த்தும் போது கூடக் கங்கையை மறக்காததைச் சுட்டிக் காட்டுகிறது.

திருமுறைகளில் கங்கைக்குத் தனிப்பெருமை தரப்பட்டுள்ளது. திருவிடை மருதூர்ப் பெருமான் ஒரு பக்திச் செல்வியான நங்கைக்குத் தான்அணிந்த மாலையைத் தருகிறார். இது அப்பரடிகளுக்குச் சந்தேகமாக இருக்கிறது. சிவபெருமான் இரண்டு மாலைகள் சூடுவார். மணமாலையாகக் கழுத்தில் மாலை

போட்டிருப்பார். இதைக்கழற்றிக் கொடுக்கப்பார்வதி இசைய மாட்டாள். திருமுடிமேலுள்ள மாலையைக் கங்கை விட மாட்டாள். எனவே இவர் இந்த மாலையை வேறு எங்கு வாங்கிக் கொடுத்தாரோ தெரியவில்லையே என்று வேடிக்கையாகப் பாடுகிறார்.

மங்கை காணக் கொடார்மண மாலையைக்
கங்கை காணக் கொடார்முடிக் கண்ணியை
நங்கைமீர்! இடைமருதர் இந் நங்கைக்கே
எங்கு வாங்கிக் கொடுத்தார் இதழியே

என்று கேட்கிறார். இது ஐந்தாம் திருமுறையில் உள்ள திருக்குறுந்தொகை.

கங்கைவார் கடைக்கரந்தார்க் கன்ப ராகில்
அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே

என்பதும் அப்பரடிகள் அருள்வாக்கு. கங்கையை விடக்காவிரி சிறப்பு என்பது ஆழ்வார்கள் முடிவு. "கங்கையில் புனித மாய காவிரி" என்று தொண்டரடிப்பொடியாழ்வாரும் "கங்கையிலும் தீர்த்தம்மலி கணபுரத்தென் கருமணியே" என்று குலசேகராழ்வாரும் பாடுகிறார்கள். காசியாத்திரை செய்பவர் மனம் பக்குவப்பட்டு எங்கும் ஈசன் இருக்கிறான் என்ற சிந்தனை உருவாக வேண்டும். எல்லாம் சிவமயம் என்றெண்ணினால் தவறு செய்ய வாய்ப்பில்லை. இதை அப்பரடிகள்,

கங்கை யாடிலென்? காவிரி யாடிலென்?
கொங்கு தண்குமரித்துறை ஆடிலென்?
ஓங்கு மாகடல் ஓதநீராடி லென்?
எங்கும் ஈசன் என் னாதவர்க்கு இல்லையே

என்று பாவநாசத்திருக்குறுந்தொகையில் பாடக் காண்கிறோம்.

பிற்காலத்தில் புரட்சிக்கவி பாரதியும் பாரதிதாசனும் கங்கையைப் பாடினார்

கங்கை நதிப்புறத்துக் கோதுமைப் பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்ளுவோம்

என்று பாரதியும்

கங்கையைப் போல் காவிரி போல்
கருத்துக்கள் ஊறும் உள்ளம் எங்கள் உள்ளம்

என்று பாரதிதாசனும் பாடினர். கவியரசு கண்ணதாசன், யமுனைக்கரையில் வாழ்ந்த கண்ணனைக் கங்கைக் கரைத் தோட்டத்தில் காக்க வைத்துப் பார்த்தார்.

கங்கைக் கரைத் தோட்டம் கன்னிப் பெண்கள் கூட்டம்
    கண்ணன் நடுவினிலே
காலை இளம் காற்று பாடிவரும் பாட்டு
    எதிலும் அவன் குரலே

என்று பாடினார். கண்ணதாசன் பாட்டைக்கேட்கக் கங்கைக்கரையில் கண்ணன் காத்திருக்கிறான் போலும்.

திரிவேணி சங்கமத்தைக் குமரகுருபரர் பார்க்கிறார். வெண்ணிறக்கங்கை சிவபெருமான்; நீலநிற யமுனை உமையவள்; நடுவில் கலக்கும் சரஸ்வதி ஞானப்பழமான முருகப்பெருமான். திரிவேணி சோமாஸ்கந்த வடிவம் ஆக அவர்கண்களுக்குத் தெரிகிறது.

தம்மேனி வெண்பொடியால் தண்ணளியால் ஆரூரர்
செம்மேனி கங்கைத் திருநதியே – அம்மேனி
மானே யமுனை; அந்த வாணிநதி யும் குமரன்
தானே; குடைவேம் தனித்து

என்று திருவாரூர் நான்மணி மாலையில் பாடுகிறார்.

கங்கை – காவிரி இணைப்புத் திட்டம் என்று எல்லோரும் பேசுகிறார்கள். தமிழ் மக்கள் மனங்களில் கங்கையும், காவிரியும் இரண்டாயிரம் ஆண்டுகளாக இணைந்துதான் இருக்கின்றன. மண்ணில்தான் இனிமேல் இணைய வேண்டும். காணும் நதிகள் எல்லாம் குமரகுருபர சுவாமிகளுக்குக் கங்கையாகவே தென்படுகிறதாம். அப்படிப் பாரத்தால் காவிரியும் கங்கை தானே! சொல்லிப் பார்ப்போம். அப்படியாவது காவிரியில் ஆண்டு முழுவதும் தண்ணீர் ஓடட்டும்.

பாத்தூண் என்னும் பண்பாட் டுடனே
நல்விருந் தோம்பும் நாட்டுக் கோட்டை
பார் வாணிகச் செல்வம் மல்கி
ஃபோர்டு ராக்பெலர் போலவா ழியவே

- சுத்தானந்த பாரதியார்

# III - காசிக்கு அருகில் உள்ள திருத்தலங்கள்

காசியாத்திரை செய்யும் பெருமக்கள் அயோத்தி, அலகாபாத் (பிரயாகை), கயா, ஆகிய தலங்களைக் கட்டாயம் வழிபட வேண்டும். இந்திய வரலாற்றிலும் ஆன்மீக வழிகாட்டுதலிலும் இவை இன்றியமையாதவை. இத்தலங்களின் சிறப்பை இப்பொழுது காண்போம்.

## அயோத்தி

"மன்னுபுகழ்க் கோசலைதன் மணிவயிறு வாய்த்தவனே" என்று குலசேகராழ்வார் மங்களாசாசனம் செய்த மண் அயோத்திமண். யுத்தமில்லாத பூமி அயோத்தி. இன்று இது ராமஜென்ம பூமி. பத்தடிக்கு அப்பால் நின்று ராமன் பிறந்த மண்ணைச் சேவிக்கலாம். செங்கண் மால் பிறந்து ஆண்டு அளப்பருங்காலம் திருவின் வீற்றிருந்த நகர் அயோத்தி. இராமபிரான் இறுதிக்காலத்தில் மூழ்கித் தன்னை மறைத்துக்கொண்ட சரயுநதி இங்கேதான் ஓடுகிறது. சரயுவில் குளிப்பது தனி மகிழ்ச்சி. பளிங்குபோன்ற நீர் பரமன் அளைந்த நீர். திருமகள் வந்து மருமகள் ஆகத் திருப்பாற்கடலே சரயுவாய் மாற வானமும் வையமும் வளர்புகழ் பரவ, மகிழ்ச்சியில் ஓடித் திளைப்பவள் சரயு. சீதையின் அந்தப்புரம், துளசிமாடம், இராமபிரானுக்குத் திருமுடி சூட்டிய பெரிய அரண்மனை, நந்தவனம், அஸ்வமேதயாகம் செய்த இடம் கைகேயி இருந்த கனகபவனம் அரண்மனை ஆகியவை அயோத்தியில் காணத்தக்கவை.

மிகச்சிறப்பான ஹனுமான்கடி எனப்படும் அனுமன் கோவில் சுமார் ஐம்பது படிகளின் மேல் அழகாக அமைந்துள்ளது. இங்கே உள்ள அனுமான் வரப்பிரசாதி. இங்கே பலரும் இராமாயணம் படிப்பதைக் காணலாம்.

## பிரயாகை (அலகாபாத்)

பிரம்ம தேவர் மிகப்பெரிய அளவில் யாகம் செய்த இடம் பிரயாகை. வெள்ளை நிறத்தில் வேகமாகப் பாயும் கங்கையும் கருநீலநிறத்தில் அமைதியாக ஓடும் யமுனையும், பூமிக்கு அடியிலிருந்து வந்து சேரும் சரஸ்வதியும் ஒன்று சேரும் திரிவேணி சங்கமம் இது. காசியிலிருந்து 125 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. அலகாபாத் சந்திப்பிலிருந்து 6 கிலோமீட்டர் தூரத்தில் திரிவேணி சங்கமம் அமைந்துள்ளது. இதைத் தீர்த்தராஜா என்பர். 'ஓம்' என்ற பிரணவத்தில் அ,உ,ம, என்ற மூன்று எழுத்துக்கள் சேர்ந்தது போல, கங்கை, யமுனை, சரஸ்வதி மூன்றும் இங்கே கூடுகின்றன. பிரணவ மந்திரத்தின் புறத்தோற்றமாக இச்சங்கமம் விளங்குகிறது.

"கங்கையைப் பார் வெள்ளை வெளேரென்று சிவபெருமான் திருநீறணிந்து பால் வண்ணத்தோடு காட்சியளிப்பது போல் இருக்கிறதல்லவா! அவர் உடம்பில் கருநாகங்கள் அலங்கரிப்பது போல் யமுனை கங்கையோடு கலக்கும் அழகான காட்சியை உன் அழகிய கண்களால்பார்" என்று திரிவேணி சங்கமத்தைக் காட்டிச் சீதா தேவியிடம் இராமச்சந்திர மூர்த்தி கூறுவதாக ரகுவம்சத்தில் காளிதாசர் குறிப்பிடுகிறார்.

இந்தச் சங்கமத்தில் அஸ்தி கரைப்பது மிகச் சிறப்பானது. அஸ்தி எத்தனை ஆண்டுகள் சங்கமத்தில் இருக்கிறதோ அத்தனை ஆயிரம் ஆண்டுகள் அவனுக்குச் சொர்க்கலோக வாழ்வு கிடைக்கும் என்று ஒரு வடமொழி சுலோகம் கூறுகிறது. பிரயாகையில் யமுனையாற்றின் கரையில் அக்பர்கட்டிய பழைய கோட்டை உள்ளது. இக்கோட்டையில் பூமிக்கு அடியில் குகைக்கோவிலில் கங்கை, பார்வதி, கண்ணன், நரசிம்மர் ஆகிய திருவுருவங்கள் கற்சிலை வடிவில் வழிபடப் பெறுகின்றன. அக்ஷய வடம் என்ற அழியாத ஆலமரமும் இங்கே உள்ளது. இதன் மூன்று கிளைகளும் மும்மூர்த்திகளாக வழிபடப் படுகின்றன.

கோட்டைக்கு வெளியில் ஒரு அனுமார் கோவில் உள்ளது. சதுரவடிவில் குளம் போல் அமைந்த பகுதியில் பெரிய பள்ளத்தில் அனுமார் படுத்தபடி இருக்கிறார். தோள்களில் இராமலெட்சுமணர் உள்ளனர். காலின் கீழ் இராவணன் சிலை உள்ளது. இங்கே வழிபடும் பக்தர் கூட்டம் அதிகம்.

இக்கோவிலுக்கு அருகில் சங்கர மடம் உள்ளது. மிகச் சிறப்பான சிற்பங்களோடு, சகஸ்ரலிங்கம், காமாட்சியம்மன், சீனிவாசப் பெருமாள் சந்நிதிகள் மிக அழகாகக் காட்சியளிக்கின்றன. பல ஓவியங்கள் காவிய வரலாறுகளைக் காட்டுகின்றன. இரண்டாவது மாடியில் நின்று பார்த்தால் திரிவேணி சங்கமம் மிக அழகாகக் காட்சியளிக்கிறது.

அலகாபாத் நகரத்தில் பார்க்க வேண்டியவை நேருபிரான் இல்லமாகிய ஆனந்தபவனமும், அதற்கு அருகில் உள்ள பரத்வாஜ முனிவர் ஆசிரமும் ஆகும்.

புத்தர், கிருஷ்ண சைதன்யர், வல்லபாச்சாரியார், சூர்தாசர், இராமகிருஷ்ண பரமஹம்சர், சாரதாமணி தேவியார், திரைலிங்க சுவாமிகள் ஆகியோர் திருவடிபட்ட புண்ணியபூமி இது. பனிரெண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை கும்பமேளா நடப்பதும் இங்கேதான்.

**கயா**

கயாசுரன் சிறந்த திருமால்பக்தன். தன்னைத் தொட்டவர்களின் பாவங்கள் எல்லாம் தொலைந்துவிட வேண்டும் என்று உலக நன்மைக்காக வரம் பெற்ற

உத்தமன். எல்லோரும் அவனைத்தொட்டுப் பாவங்களைப் போக்கத் தொடங்கினார். எத்தனை பாவங்கள் வேண்டுமானாலும் செய்துவிட்டுக் கயாசுரனைத் தொட்டால் போதும் என்று எல்லோரும் எண்ணத்தொடங்கினர். சொர்க்கத்தில் இடப்பற்றாக் குறை ஏற்பட்டது. மக்கள் மனம் பண்பட வழியில்லாமல் போனது. தேவர்கள் அவனிடம் வந்தார்கள். மிகப்பெரிய யாகம் நடத்த வேண்டும். உன் உடம்பில்தான் அதை நடத்த வேண்டும். என்று அவனுடம்பைக் கேட்க, அவன் கொடை வள்ளல் ஆதலால் அப்படியே கொடுத்தான். யாகத்தால் கயாசுரன் உடம்பு ஆடியது. தேவர்கள் எல்லாம் ஏறி நின்றாலும் ஆடிய ஆட்டம் நிற்கவில்லை. இறுதியாகத் திருமால் கதையைக் கையில் தாங்கிக் கதாதரனாக ஏறி நின்றார். ஆட்டம் அடங்கியது. யாகம் முடிந்தது. அவன் வேண்டுகோளின்படி தேவர்களும் திருமாலும் அவன் உடம்பில் தங்கிவிட்டனர். இந்த இடம் அவன் பெயரால் கயா என்று அழைக்கப்பட்டது. இங்கே முன்னோர்களுக்குத் திதி கொடுக்கப்பட்டால் அவர்கள் வைகுண்டபதவி அடைவார்கள் எனத் திருமால் வரம் தந்தார். இங்கே ஆண்கள் பெண்கள் அனைவரும் திதி கொடுக்கலாம். சீதாதேவி இங்கே இராமர் வரத்தாமதமானதால் சூரியன் மலைவாயிலில் விழுமுன் தன் மாமனாராகிய தசரதருக்கும், தந்தையாகிய ஜனகருக்கும் திதிகொடுத்தாள். இந்தத்தலம் பீகார் மாநிலத்தில் பல்குனி ஆற்றின் கரையில் அமைந்துள்ளது. காசியிலிருந்து சுமார் 265 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது. கயாவில் பிண்டம் போடுவதை இந்துக்கள் புனிதமான கடமையாகக் கொண்டிருக்கிறார்கள். மனிதன் பற்றுக்களைக் குறைக்க வேண்டும் என்பதற்காக இங்கே வந்து செல்பவர்கள் தாங்கள் விரும்பும் பழம், காய், இலை இவற்றில் ஒவ்வொன்றைக் கைவிடுவதாக, இங்குள்ள மிகப்பெரிய ஆலமரமான வடபால விருட்சத்தின் கீழ், தண்ணீரைக் கையில் வைத்துக் கொண்டு, அதன்மேல் சத்தியம் செய்து கொடுப்பது வழக்கம். தேவகோட்டை ஜமீன்தார் ஒருவர் கயாவில் வாழை இலையைத் தள்ளிவிட்டார். கடைசிவரை அவர் வாழை இலையில் சாப்பிடாமல் விரதம் காத்தார். என்னுடைய நண்பர் ஒருவர் கயாவுக்குச் சென்று வந்தார். அவரிடம் கேட்டேன் "நீங்கள் எதை விட்டீர்கள்" என்று. காசியிலிருந்து கயாவுக்கு பஸ் மூலம் சென்று பெரும் பாடுபட்ட அவர் கூறினார் "கயாவுக்குப் போவதையே விட்டு விட்டேன்" என்று.

வாழ்நாளில் அனைவரும் கட்டாயம் சென்று வழிபட வேண்டிய இடம் கயா. "ஒருவன் நான்கு பிள்ளைகளை ஏன் பெற்றுக் கொள்கிறான்? அவர்களில் ஒருவனாவது கயைக்குச் சென்று தனக்குத் திதி கொடுத்துத் தன்னைக் கரையேற்ற மாட்டானா என்று தான்" என்று தசரதர் கூறுவதாக ஒரு ராமாயணம் கூறுகிறது. பல்குனி ஆறு இங்கே திருமாலாகவே கருதப்படுகிறது. கிருஷ்ண சைதன்யர் இங்கேதான் பக்திப் பழமாக மாறினார். கயாவில் உள்ள ஆலயத்தின்

அமைப்பு மிக வியக்கத்தக்கது. எண்கோண வடிவத்தில் நான்கு அடிக்குறுக்களவில் ஒரு தரை அமைப்பில் ஒன்றறை அடி நீளத்தில் அரையடி அகலத்தில் ஒரு பாறையில் விஷ்ணுபாதம் உள்ளது இதுதான் பூஜிக்கப்படுகிறது இப்பாதத்தில் பிண்டம் போட்டு, நம் தலையை வைத்து வணங்க வேணடும். இங்கே தெரிந்தவர் தெரியாதவர் யாருக்கு வேணடுமானாலும் பிண்டம் போடலாம். ஆண் குழந்தை இல்லாதவர் தனக்குத் தானே ஆதமபிண்டமும் போடலாம். (ஆண்குழந்தை இருப்பவர் ஆத்ம பிண்டம் போட்டால், அது தன் மகன்மேல் அவருக்குள்ள நம்பிக்கையைக் காட்டுகிறது)

இங்கே எப்போது வேண்டுமானாலும் திதி கொடுக்கலாம். நகரச் சத்திரததிற்காகத் தனி பண்டாககள் உள்ளனர். அதிகச் செலவு வைக்க மாட்டார்கள்.

இத்தலத்தில் சந்நியாசிகள் தங்கள் தண்டத்தை விஷ்ணு பாதத்தில் வைத்து வணங்குகிறார்கள். ஆலயக்கடைகளில் செம்புத்தட்டில் விஷ்ணுபாதம் வாங்கி வீட்டில வைத்துக்கொள்ளலாம்.

கோவிலுக்குள் சிறிய அட்சய வடமும் (ஆலமரம்) கோவிலிலிருந்து ஒரு கிலோமீட்டர் தொலைவில் பெரிய அட்சய வடமும் உள்ளன. இப்பெரிய ஆலமரத்தின இலையில் தான் பிரளய காலத்தில் பால கிருஷ்ணனாகப் பெருமாள் பள்ளி கொண்டு அருள்வதாகக் கூறப்படுகிறது.

**புத்தகயா**

கயை நகருக்குத் தெற்கில் சுமார் 10 கிலோ மீட்டர் தொலைவில் உலகப் புகழ்பெற்ற புத்தகயா உள்ளது. இங்கே தான் சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன்னால் புத்தபகவான் வைகாசி விசாக நாளில் பௌர்ணமி இரவில் ஞானம் பெறறார். அந்தப் போதிமரமும் புத்தர் ஆலயமும் இங்கே உள்ளன. இம்மரத்தின் கிளை இலங்கையில் அனுராதாபுரத்தில் நடப்பட்டுள்ளது. அசோகர் இலங்கையில் பௌத்த மடங்களையும் கட்டினார்.

புத்தகயாவில் இலங்கை, பர்மா, வியட்நாம், நேபாளம், ஜப்பான், சீனா முதலிய பலநாட்டு மக்களும் கோவில்களைக் கட்டியுள்ளார்கள். இவை ஒவ்வொன்றும் அந்தந்த நாட்டுப் பண்பையும் கலைச்சிறப்பையும் பக்தியையும் காட்டுவனவாக அமைந்துள்ளன.

இலங்கை மன்னன் மேகவண்ணன் என்பவன் சமுத்திரகுப்தருக்குத் தூது அனுப்பி, புத்தகயாவில் கோவில்கட்டினான். இது சுமார் 2300 ஆண்டுகளுக்கு

முன் நிகழ்ந்தது. அதன்பின் மற்ற ஆலயங்கள் கட்டப்பட்டன. இங்கேயுள்ள அருங்காட்சியகம் காண வேண்டிய ஒன்றாகும். பௌத்த விடுதிகள், தங்கும் இடங்கள், பிர்லா மந்திர், வானுறஓங்கிய புத்தர்சிலை, பலநாட்டுப் பௌத்தத் துறவிகள், எண்பதாண்டைத் தாண்டிய பௌத்த சந்யாசிகள், அவர்கள் போதிமரத்துக்கு முன் நூற்றெட்டு முறைகளுக்கு மேல் விழுந்து வணங்கும் பக்திச் சிறப்பு ஆகியவற்றை எழுத்தில் கொண்டுவர இயலாது. உலகின் மிகப்பெரிய மதமான பௌத்த மதத்தை இந்தியா தந்தது என்பதற்குப் புத்தகயா ஒரு மௌனசாட்சியாக – வாழும் வரலாறாகத் திகழ்கிறது.

**முண்டம் தண்டம் பிண்டம்**

காசியாத்திரை செய்பவர்கள் திரிவேணி சங்கமத்தில் முதலில் வணங்கி முடி எடுக்க வேண்டும். இது முண்டம் எனப்படும். பிறகு காசியில் விசுவநாதப் பெருமானை வணங்கித் தெண்டனிட்டுக் கும்பிட வேண்டும். இது தண்டம் எனப்படும். மூன்றாவதாகக் கயையில் பிண்டம் போட வேண்டும். இது பிண்டம் எனப்படும். அழியாத ஆலமரமாகிய அக்ஷயவடம் இந்த மூன்று தலங்களிலும் பரவி நிற்பதால் மூன்றையும் வழிபட இந்த முறை பின்பற்றப்படுகிறது.

## தீபாவளியும் லட்டுத்தேரும்

தீபாவளித் திருநாளில் காசி விசுவநாதர் கருவறைக்கு முன் உள்ள மண்டபத்தில் எழுந்தருளி இருக்கும் சிவலிங்கத் திருமேனி, லட்டுக்களால் செய்யப்பட்ட தேரில் இருப்பது போல அலங்கரிக்கப்படுகிறது. பிட்டுக்குமண் சுமந்த பெருமான் லட்டுத் தேரைக் கண்டால் விட்டுவிடுவானா? கனியினும், கட்டிபட்ட கரும்பினும் இனிய பெருமான், லட்டுத் தேரில் எழுந்தருளி இருக்கிறான். கோவில் முழுவதும் தட்டுத் தட்டாகக் கூடை கூடையாக இனிப்புகள் கொட்டிவைக்கப்பட்டுள்ளன. எங்கே பார்த்தாலும் இனிப்புத்தான் – சர்க்கரை வியாதிக்காரர்கள் – பாவம் பார்த்தே தவித்துப் போய் விடுவார்கள். ஆலயமுழுவதும் இனிப்பாக இருக்கிறது. ஆண்டவன் திருநாமம் அதைவிட இனிப்பாக இருக்கிறது. 'ராமநாம பாயசக்கே கிருஷ்ணன் நாம சர்க்கரை' என்ற புரந்தரதாசர் பாடல் நினைவுக்கு வருகிறது.

# IV - காசி-நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம்

"தென்பட்ட இடமெல்லாம் சிவலிங்கம் காட்சிதரும்
கண்பட்ட இடமெல்லாம் கறைக்கண்டன் காத்திருப்பான்"

என்று சான்றோர் போற்றும் திருத்தலம் காசி. புதிய சிவன்கோவில் அமைக்கும் பொழுது காசியிலிருந்து சிவலிங்கம் கொண்டு வருவது மரபு. இத்தகைய திருத்தலத்தில் சிவப்பணி செய்யும் பேறு நகரத்தார்கள் பெற்ற பெரும்பேறு.

கி.பி. 1811 ஆம் ஆண்டுமுதல் விசுவநாதப் பெருமானுக்கு நாடோறும் அபிஷேகம், அர்ச்சனை முதலியன நகரத்தார்களால் செய்யப்பட்டு வருகின்றன. காசி கேதார கட்டத்துக்கு அருகில் உள்ள குமாரசாமி மடத்திலிருந்து அபிஷேகப் பொருட்கள் கொண்டு செல்லப்பட்டன. அந்தப் பொருட்கள் வைக்கப்பட்ட இடம் இன்றுவரை "செட்டி கட்டு" என்றே அழைக்கப்பட்டு வருகிறது.

காசி நகரச் சத்திரம் விசுவேசர் கோவிலுக்கு அருகே உள்ள "குதோலியா" பகுதியில் அமைந்துள்ளது. 1863 முதல் 1895 வரை பல இடங்களும் கட்டிடங்களும் வாங்கப்பெற்று, இன்று மிகப் பெரிய மாளிகையாக வளர்ந்துள்ளது. ஆயிரக்கணக்கானவர்கள் பாதுகாப்பாகவும் வசதியாகவும் தங்குவதற்கு இது போல வேறிடம் காசியில் இல்லை. நகரத்தார்கள் காசிச் சத்திரத்துக்காகவும் அதன் கிளைகளுக்காகவும் கோடிக்கணக்கான ரூபாய் செலவழித்துள்ளனர். இத்தொகை முழுவதும் நகரத்தார்களால் மட்டுமே கொடுக்கப்பெற்றது என்பது குறிப்பிடத்தக்கது. 1894ல் நகரின் மத்தியில் சிக்ரா பகுதியில் பெரிய இடம் வாங்கப்பட்டு நந்தவனம் அமைக்கப்பட்டது. 1897ல் பசுமடம் கட்டப்பட்டது. சத்திரத்திலிருந்து அதிகாலை உஷத்கால பூசை, உச்சிக்கால பூசை, அர்த்தசாமபூசை ஆகியவை நடத்தப்படுகின்றன. இச்சத்திரம் கட்டும் பணியில் பெரிதும் ஈடுபட்டுப் புண்ணியம்பெற்ற நகரத்தார்களில் தேவகோட்டை சத்திரம் சோமசுந்தரம் செட்டியார், தேவகோட்டை ஜமீந்தார் ஏ.எல்.ஏ.ஆர். சோமநாதன் செட்டியார் நாட்டரசன் கோட்டை கண. மெ. நா. சொக்கலிங்கம் செட்டியார் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

**சம்போ**

தமிழும் சைவமும் பிரிக்க முடியாதவை. சத்திரமும் சம்போவும் பிரிக்க முடியாதவை. சம்போ என்பது சிவனை அழைக்கும் சொல். காசி விசுவநாதர்

கோவிலுக்கு நாள்தோறும் இரண்டுமுறை காலை 11 மணிக்கும் இரவு 8.30 மணிக்கும் அபிஷேகப் பொருட்கள் முறைப்படி எடுத்துச் செல்லப்படுகின்றன. "சம்போ! சம்போ! சங்கர மகாதேவா" என்று சொல்லிக் கொண்டு சத்திரத்துப் பணியாட்கள் இவற்றை எடுத்துச் செல்வர். மேளதாளத்தோடு 'சம்போ' செல்வதைப் பொதுமக்களும் கடைக்காரர்களும் கண்டு எழுந்து நின்று வணங்குவர். சுமார் 192 ஆண்டுகளாக இந்த நடைமுறை பழக்கத்தில் உள்ளது. தடையில்லாமல் நடப்பது இதுவே என்றும் கங்கையில் வெள்ளம் வந்து ஊருக்குள் புகுந்த போது கூடப் படகில் வைத்துச் 'சம்போ' சென்றது என்றும் காசி வணிகர்கள் வியந்து கூறுகின்றனர். நகரச் சத்திரத்தின் மாடியில் உள்ள முருகப்பெருமான் படத்துக்கு முன்பாகச் சாம்பிராணிக் கலசத்தை வைத்துப் பிறகு பாதாள ஈசுவரர் கோவிலில் இருந்து தசாங்கம் போட்டு, நகரேசுவரர் கோவிலை வலம் வந்து சம்போ புறப்படும் காட்சியைக் காணக்கண் கோடி வேண்டும். உச்சிக்காலப்பூசைக்குக் கொண்டு போகப்படும் பொருட்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

1. வாசனைத்தைலம் 2. தேன் 3. பன்னீர் 4. ஊதுபத்தி 5. சூடம் 6. அத்தர் 7. பழுப்புச்சர்க்கரை 8. திருநீறு 9. சந்தனம் 10. முக்களை வில்வம் –16 11. அறுகம்புல் 12. மூன்று பூமாலைகள் 13. ஆறேகால்படி பால் 14. தயிர் 15. பஞ்சாமிர்தம் 16. பிரயாகைக் கங்கை 17. பூணூல் 18. மங்கள அட்சதைக்கான அரிசி.

அர்த்த சாமப் பூசைக்கு இவற்றுடன் முக்களை வில்வம் 108, சவ்வாது, பட்டு, நாகாபரணம், பால் அண்டா, பூக்கூடை, வெண்சாமரம், சோடச உபசார ஆரத்திப் பொருட்கள் ஆகியவை வெள்ளிப் பாத்திரங்களில் கொண்டு போகப் படுகின்றன. அன்னபூரணி கோவிலுக்கு அபிஷேகப் பொருட்களும், குங்குமமும் ஒரு வட்டமான தூக்குச்சட்டியில் வைத்துக் கொண்டு போகப் படுகின்றன.

சம்போ நேரப்படி செல்லும். பஞ்சாப் மெயில் தவறினாலும் சம்போ நேரம் தவறாது என்பது காசி வணிகர்கூறும் பழமொழி. 1942ல் "வெள்ளையனே வெளியேறு" என்ற இயக்கம் நடத்தப்பெற்றுக் காசியில் கலகங்கள் நிகழ்ந்த போது கூட, உரிய விதிவிலக்குப் பெற்று உரிய நேரத்தில் சம்போ சென்று வந்தது.

## காசி நகரச் சத்திரத்தில் உள்ள ஆலயங்கள்

### 1. பாதாள ஈசுவரர் கோவில்

நகரேசுவரர் திருக்கோவிலுக்கு எதிரில், காசிச்சத்திரத்தின் முன்வாயிலுக்குள் நுழைந்ததும் இடப்புறத்தில் பள்ளமான இடத்தில் இக்கோவில் அமைந்துள்ளது. இந்தக் கோவிலில் நான்கு சிவலிங்கங்களும் ஒரு நந்தியும் ஒரு பாவை விளக்கும் உள்ளன. நகரத்தார்கள் இந்த இடத்தை விலைக்கு வாங்குவதற்கு முன், இது கோஷாயி சாதுக்கள் மடமாக இருந்தது. அங்கிருந்து ஒரு குருநாதரும் நான்கு சீடர்களும் பெருஞ்சித்தர்கள். ஐவரும் ஒரே சமயத்தில் சமாதியாகி இருக்கிறார்கள். அவர்களில் நால்வர் சிவலிங்க வடிவம் பெற ஒருவர் நந்திஎம் பெருமான் வடிவம் பெற்றார். திருவொற்றியூரில் சிவலிங்க வடிவுற்ற பட்டினத்தாரின் மரபில் வந்த நகரத்தார்கள் இந்தப் பாதாள ஈசுவரரை விடாமல் சிக்கெனப் பிடித்துக் கொண்டார்கள். அன்பெனும் பிடிக்குள் அகப்படும் மலையான பாதாள ஈசுவரர் இந்தச் சத்திரத்தையும், தன்னை வழிபடும் நகரத்தாரையும், தன் அருட்கண்ணால் ஒரு பார்வை பார்த்தார். சத்திரமும் வளர்ந்தது. நகரத்தார்களும் உயர்ந்தனர். காசியாத்திரை மேற்கொள்வோர் அறிந்தோ அறியாமலோ செய்திருக்கக்கூடிய தவறுகளுக்குப் பிராயச்சித்தமாக, காசியை விட்டுப் புறப்படுமுன் பாதாள ஈசுவரருக்கு அபிஷேகம் செய்து வழிபடுவது வழக்கம். வாரம் தோறும் திங்கட்கிழமை காசிச்சத்திரத்திலிருந்து இவருக்கு அபிஷேகம் செய்யப்படுகிறது. காசி விசுவநாதர் சந்நிதிபோல் இவர் சந்நிதியும் அருள்மணக்கும் அற்புத சந்நிதி. இவரை வணங்கிப் போற்றுவோம். எல்லாத் துன்பங்களையும் இவர் தீர்த்தருள்வார்.

மூர்த்தியெனும் 'நான்குசிவ லிங்கம் போற்றி!
முன்பிருக்கும் நந்தியுடன் அருள்வாய் போற்றி!
கூத்தாடும் எம்பெருமான் கடைக்கண் காட்டக்
கோஷாயி சாதுவென வந்தாய் போற்றி!
காத்திருக்கும் அடியார்கள் கவலை தீர்க்கக்
காசிநகர்ச் சத்திரத்தில் கலந்தாய் போற்றி!
பார்த்தவுடன் அருள்பொழியும் பரனே போற்றி!
பாதாள ஈஸ்வரரே! போற்றி போற்றி!

என்று பாடிப்பணிவோம். இவர் சந்நிதியில் திருமுறைகள் பாடியும் திருவாசகம் முற்றோதல்செய்தும் திருவருள் பெற்றவர் பலர். அவர்களோடு நாமும் சேர்ந்து நலம் பெறுவோம்.

## 2. நகரேசுவரர் கோவில்

இக்கோவிலில் நகரேசுவரர் கிழக்குப் பார்த்த சந்நிதியில் இருக்க அவருக்கு இடப்புறத்தில் தெற்கு நோக்கிய சந்நிதியில் நகரேசுவரி காட்சியளிக்கிறார். கோவிலின் வெளி வாயிலில் கிழக்குப் பார்த்த விநாயகர் காட்சிதருகிறார். கருவறை மதிலுக்கு எதிரில் சுற்றுப்பிரகாரத்தில் நந்தியுடன் கூடிய 50 சிவலிங்கங்கள் உள்ளன. இவை அனைத்தும் புத்தம் புதிதாகக் காட்சியளிப்பது முறைப்படி பூசை நடப்பதைக் காட்டுகிறது. இப்பெருமை இந்த ஆலயத்தின் அர்ச்சகரையும் சத்திர நிர்வாகத்தையுமே சேரும். தென்மேற்கு மூலையில் விநாயகரும், வடமேற்கு மூலையில் வள்ளி தெய்வானையுடன் முருகப்பெருமானும் காட்சி தருகின்றனர். இவற்றுக்கிடையில் கல்கத்தாவிலிருந்து கொண்டுவரப்பட்ட உற்சவ விநாயகரும் இரண்டு வேல்களும் இடும்பனும் இருக்க வடகிழக்கு மூலையில் வயிரவர் இருக்கிறார். நடராஜர், சிவகாமி, மாணிக்கவாசகர், வள்ளி தெய்வானை முருகன் ஆகிய உற்சவ மூர்த்திகளும் உள்ளனர். நகரேசுவரருக்கு வெள்ளி நாகாபரணமும் நகரேசுவரிக்கு வெள்ளி அங்கியும் உள்ளன. நகரத்தார் பலர் இங்கே கட்டளைகள் வைத்துள்ளனர். ஆண்டு முழுவதும் இங்கே சிறப்பு வழிபாடும் உற்சவர் புறப்பாடும் நிகழ்கின்றன. காசிச் சத்திரத்தில், வேற்று மொழி பேசுகின்ற மாநிலத்தில் நாம் யாத்திரை செய்கிறோம் என்ற எண்ணமே எழாதபடி நம் வீட்டில், நம் ஊர்ச் சிவன் கோவிலில் இருப்பது போன்ற உணர்வே உண்டாகிறது.

## 3. அன்னபூரணி கோவில்

அன்னம் பாலிக்கும் பெரிய மண்டபத்தில் அன்னபூரணியின் கருங்கல் திருமேனி வைக்கப்பட்டு வழிபடப் பெறுகிறது. தீபாவளியன்று மாலை திருவிளக்கு வழிபாடு நடைபெறுகிறது. 108 நகரத்தார் பெண்கள் கலந்து கொள்கிறார்கள்.

## 4. நடராஜர் சந்நிதி

மாடியில் பெட்டியடிக்குப் பக்கத்தில் மிகச்சிறப்பாகக் கலையழகோடு திகழும் நடராஜப் பெருமான் சிவகாம சுந்தரி யோடும் மாணிக்க வாசகரோடும் காட்சியளிக்கிறார். இவரைப் பார்க்கும்போது 'என்று வந்தாய் என்னும் எம்பெருமான் தன் திருக்குறிப்பே" என்ற அப்பரடிகள் வாக்கு நினைவில் தோன்றும். கயாவில் இருந்த இந்தத் திருவுருவங்கள் இப்பொழுது காசிக்குக் கொண்டு வரப்பட்டு வழிபடப்பெறுகின்றன.

## காசியில் நகரத்தார் ஏற்படுத்தியுள்ள கட்டளைகள்

1. பால்கட்டளை 2. பசுமடக்கட்டளை 3. நந்தவனக் கட்டளை 4. வில்வம் அட்சதை அறுகம்புல்கட்டளை 5. புனுகு சட்டக்கட்டளை 6. கற்பூரக்கட்டளை 7. அத்தர்க்கட்டளை 8. விசாலாட்சி அம்மன் பாலபிஷேகக் கட்டளை 9. அன்னபூரணி அம்மன் பாலபிஷேகக் கட்டளை 10. உபதான அரிசிக்கட்டளை 11. சாதுக்கள் போஜனக் கட்டளை 12. சோமவாரக் கட்டளை 13. அன்னதானக்கட்டளை 14. நைவேத்தியக்கட்டளை 15. சாம்பிராணிக் கட்டளை 16. கங்கை அபிஷேகக் கட்டளை.

## காசியில் திருமுறை வேத பாடசாலை

இப்பொழுது காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திர மேலாண்மைக்குழுவின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள கோட்டையூர் டாக்டர் எம்.ஆர். முத்தையா செட்டியார் அவர்கள் காசிச்சத்திரத்திலேயே ஒரு திருமுறை வேதபாடசாலையைத் தொடங்க ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கிறார்கள். பல நகரத்தார் பெருமக்களின் உதவியுடன் இத்திட்டம் செயல்படவுள்ளது. இதன்படி திருப்பரங்குன்றத்தில் ராஜா பட்டர் அவர்கள் நடத்திவரும் ஸ்கந்தகுரு வித்யாலய மாணவர்களில் 11 பேரும் வேதம், திருமுறை இரண்டும் சொல்லித்தர ஒருகனபாடிகளும் காசிக்கு அனுப்பப் பட்டு, நகரச்சத்திரத்தில் தங்கிப் பயிற்சி பெறுவர். சம்போவை இந்த அந்தணப் பெருமக்கள் முறைப்படி கொண்டு செல்வர். கனபாடிகள் சம்பளம் போக, மாணவர்களுக்கு உதவித்தொகையும் வழங்கப்பெறும். இம்முறை இந்த ஆண்டு 12–11–2004 முதல் பின்பற்றப்படவிருக்கிறது. இனி விசுவநாதர் சந்நிதியில் தமிழ்த் திருமுறைகளும் வேதங்களும் ஒலிக்கும். வேதபாடசாலை, திருமுறைப்பாடசாலை ஆகியவற்றுக்கு அறக்கட்டளை வைத்து, மாணவர்கள் சேராததால், முறைப்படி நடத்தமுடியாத நகரத்தார் பெருமக்கள், இந்தத்திட்டத்தில் பங்கேற்றுப் பணிசெய்யலாம்.

## காசிநகரச் சத்திர மேலாண்மைக் குழு (Managing Society) வின் வரலாறு

1801 ஆம் ஆண்டு முதல் கல்கத்தாவில் அரிசி முதலிய பொருட்களை ஏற்றுமதி செய்து, நகரத்தார்கள் செல்வம் பெருக்கினர். கப்பல் கம்பெனிகள் கப்பல் கட்டணத்தில் ஒருபகுதியை நகரத்தார்களுக்கு "ரிபேட்" ஆகத் திருப்பித் தந்தனர். ஆண்டுதோறும் இவ்வகையில் ரூபாய் இருபத்தைந்தாயிரம் வரை

வருமானம் வந்தது. கல்கத்தா நகரத்தார்கள் இப்பணத்தை அறப்பணிக்கும் ஆண்டவன் திருப்பணிக்கும் பயன்படுத்தத் தீர்மானித்தனர். காசி விசுவேசருக்கு அபிஷேகம் செய்யவும், ஏழைகளுக்கு அமுதுபடைக்கவும் தொடங்கினர். காசியில் குமரகுருபரர் மடத்தில் சிலகாலமும் பின்னர் வேறு இடங்களிலும் இருந்து கொண்டு, இப்பணிகளைச் செய்தனர்.

சுமார் ஐம்பதாண்டுகளுக்குப் பிறகு, இந்துஸ்தானி கோஷாயி சாதுக்கள் மடம் விலைக்கு வாங்கப்பட்டது. ருத்ரோத்காரி (1863) ஆவணிமாதம் 10ஆம் நாள் காசிச்சத்திரம் கட்டப்பட்டது. விசுவநாதருக்கு மூன்றுகால பூசை, அன்னதானம் ஆகியவை இங்கிருந்து செய்யப்பட்டன. 1880 முதல் கல்கத்தா நகரத்தார் செல்வம் அதிகரித்தது. கல்கத்தா, காளிகாட், பிரயாகை, அயோத்தி, கயை, தாடகேசுவரம், கோதாவரி ஆகிய தலங்களில் கட்டிடங்கள் கட்டப்பெற்றும் மூர்த்திகள் பிரதிஷ்டை செய்யப்பெற்றும் தெய்வப் பணிகள் சிறப்புற்றோங்கின. பம்பாய் நகரத்தார்கள் நாசிக் பஞ்சவடியில் சத்திரம்கட்டித் தண்டாயுதபாணி திருவுருவத்தைப் பிரதிஷ்டை செய்தனர். இச்சத்திரம் பம்பாய் நகரத்தார் மேற்பார்வையிலும் மற்ற சத்திரங்கள் கல்கத்தா நகரத்தார் மேற்பார்வையிலும் இயங்கி வந்தன.

பின்னர், கல்கத்தா நகரத்தார் கடைகளில் பல, இரங்கூனுக்கு மாற்றப் பெற்றன. 1925ல் இரங்கூன் நகரத்தார்கள் காசிச் சத்திரத்துக்கு மகமை எழுதினர். காசி முதலிய சத்திரங்களின் மேற்பார்வை இரங்கூன் நகரத்தார் பொறுப்பில் விடப்பட்டது. 10–9–1934ல் ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம் மானேஜிங்க சொசைட்டி இரங்கூன் சார்பதிவாளர் அலுவலகத்தில் பதிவு செய்யப்பட்டது. 1940 ஆம் ஆண்டு முதல் நகரத்தார்களின் வேண்டுகோளுக்கிணங்க, நாசிக் பஞ்சவடி நகரச்சத்திரம், கார்த்திக் சுவாமி கோவில் ஆகியவையும் அவற்றைச் சேர்ந்த சொத்துக்களும், காசிச் சத்திர நிர்வாகத்தின் கீழ்க் கொண்டுவரப்பட்டன.

1942ல் பர்மாவில் ஜப்பானியர் ஆட்சி ஏற்பட்டது. இந்தியா–பர்மா போக்குவரத்தில்லை. எனவே இரங்கூன் நிர்வாக சபை செயல்படமுடியவில்லை. பர்மாவிலிருந்து பணம் வருவது தடைப்பட்டது. இருந்தாலும் அறச் செயல்கள் தடைப்படவில்லை. 9–9–1943ல் காரைக்குடி அறுபத்து மூவர் குருபூசை மடத்தில் நகரத்தார்கள் கூடி, ஒரு தற்காலிக நிர்வாகக்குழுவை அமைத்தனர். தேவகோட்டை அள.சுப. பழ. சுப்பிரமணியன் செட்டியார் தலைவராகவும், காரைக்குடி மெ.செ.ச. சிதம்பரம் செட்டியார் செயலாளராகவும், கானாடுகாத்தான் மு.சித.மு. சிதம்பரம் செட்டியார் பொருளாளராகவும் பணியாற்றினர். மிகச் சோதனையான காலத்தில்

விசுவநாதப் பெருமான் திருத்தொண்டை விடாமல், குறையாமல், முறையாக நடத்த ஏற்பாடு செய்து சாதனை புரிந்த பெருமை இக்குழுவுக்கே உரியது. இரண்டாம் உலகப்போர் முடிந்தபின் 1953ல் பர்மா நகரத்தார் திரும்பவும் நிர்வாகத்தை ஏற்றுக்கொண்டனர். மலேயா நகரத்தார்களிடம் நன்கொடை பெறப்பட்டது. செய்கோன் நகரத்தார், இரங்கூன் நகரத்தார் ஆகியோர் நன்கொடை தந்தனர். 1959ல் உபயோகத்தில் இல்லாத நகைகளும் வெள்ளிச் சாமான்களும் விற்கப்பட்டன. 11-2-1962ல் நகரேசுவரர் கோவில் திருக்குட நன்னீராட்டு விழா நடந்தது. 1963ல் காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திர நூற்றாண்டுவிழா மிகச்சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. அப்பொழுது உலகம் சுற்றிய தமிழர், பயண இலக்கியப் பல்கலைக்கழகம் சோமலெ அவர்கள ஒரு மலர் தயாரித்துத் தந்தார்கள். பொன்போலப் போற்றத்தக்க இம்மலர் காசியையும் நகரத்தார்களையும் பற்றிய ஆராய்ச்சி நூலாகவும் அருமையான வரலாற்றுப் பெட்டகமாகவும் திகழ்கிறது. மலர்மன்னர் சோமலெ இம்மலருக்கு மணம் சேர்க்கிறார்.

இரங்கூன் நகரத்தார்களில் பெரும்பகுதியினர் சொந்த ஊர்களுக்கு வந்ததால் இந்த நிர்வாகத்தை இந்தியாவிலுள்ள நகரத்தார்களிடம் ஒப்புவிக்க வேண்டுமென இரங்கூனில் 12-4-1964ல் நடந்த கூட்டத்தில் தீர்மானிக்கப்பெற்றது. இந்த மாற்றத்தைச் சட்டப்படி நிறைவேற்ற ஒரு இடைக்காலக் கமிட்டி நியமிக்கப்பட்டது. 31-3-1965ல் மேலாண்மைக்கழகம் இந்தியாவில் பதிவு செய்யப்பட்டது. 2-8-1967ல் மதுரை கீழமாரட் தெருவில் ஒரு வீடு வாங்கிப் புதுப்பிக்கப்பட்டது. எழுபத்தாறு ஊர் நகரத்தார்கள் கூட்டம் கோவிலூரில் கூட்டப் பெற்றது. அக்கூட்டத்தில் தேவகோட்டை அள.அரு. சோமநாதன் செட்டியார் தலைவராகவும் நாட்டரசன் கோட்டை கண.மெ.நா. சொக்கலிங்கம் செட்டியார் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். 9-2-1970ல் காசிச் சத்திர நிர்வாகம் இந்த மேலாண்மைக் கழகத்திடம் ஒப்படைக்கப்பட்டது. ஸ்ரீகாசி, அயோத்தி, பிரயாகை, கயா, கல்கத்தா, தாரகேசுவரம், நாசிக்பஞ்சவடி, கோதாவரி ஆகிய சத்திரங்களும் அவற்றுக்குச் சொந்தமான சொத்துக்களும், காளிகாட் வீடும் ஒப்படைக்கப்பட்டன. 23-9-1974ல் சென்னை ரெங்கோன் நகரவிடுதி நிர்வாகம் ஒப்படைக்கப்பட்டது. கோதாவரியில் இருந்த சத்திரம் பழுதடைந்து விட்டதால் 2-8-1982ல் விற்கப்பட்டது. காளிகாட் வீடு பழுதடைந்த நிலையில் வாடகைக்கு விடப்பட்டுள்ளது. தற்போது நம் மேலாண்மைக்கழக நிர்வாகத்தில் கீழ்க்கண்ட சத்திரங்கள் இருக்கின்றன.

1. ஸ்ரீ காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம், வாரணாசி

2. நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம், பிரயாகை

3. நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம், அயோத்தி

4. நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம், கயா

5. நகரத்தார் ஹவுஸ், கல்கத்தா

6. நகரமடம், தாரகேசுவரம்

7. நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம், நாசிக் பஞ்சவடி

8. ரெங்கோன் நகர விடுதி, சென்னை

9. ஸ்ரீகாசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திர மேலாண்மைக்கழகம், காரைக்குடி

மேலாண்மைக் கழகத்தின் பதிவு அலுவலகம் வாரணாசியிலும், நிர்வாக அலுவலகம் காரைக்குடியிலும், மத்திய அலுவலகம் சென்னையிலும் உள்ளன.

மேலாண்மைக்கழகத்தின் செயல்முறைகள், சத்திரநிர்வாகம், கூட்டங்கள் விசுவநாதர் பூஜைக்கான திட்டங்கள், கட்டளைகள் ஆகியவற்றை முறையாகப் பதிவு செய்து, வரிசைப்படுத்திப் பல ஆண்டுகள் தொடர்ந்து முறைப்படி நடக்க உதவிய பெருமை 1989 முதல் 1998 வரை தலைவராகவும் 1984 முதல் 1989 வரை செயலாளராகவும் பணியாற்றிய கண்டனூர் சுப. சண்முகம் செட்டியார் அவர்களையே சேரும். காசித்தலத்திலுள்ள சொத்துக்களைக் காப்பாற்றிய இப்பெருமகனார் காசி விசுவநாதரின் பக்தர் கூட்டத்திலும் தலைமையேற்கத் தகுதி படைத்தவர். இவரை அருட்பணி அண்ணல் என நகரத்தார்கள் பாராட்டியது மிகவும் பொருத்தமாகும்.

## காசிக்குப் பாதயாத்திரை

நகரத்தார் பெருமக்கள் ஏழு ஆண்டுகளுக்கு ஒருமுறை இராமேஸ்வரத்திலிருந்து காசிக்குப் பாதயாத்திரை செல்கிறார்கள். தேவகோட்டை பொற்கிழிக்கவிஞர் அரு. சோமசுந்தரம் 1983ல் இப்பணியைத் தொடங்கினார். 1990, 1997, 2004 ஆகிய ஆண்டுகளில் இதுவரை நான்குமுறை இப்பாதயாத்திரை நடைபெற்றுள்ளது. காசியைக் கவிதையாலும் அளக்கலாம். காலாலும் அளக்கலாம். அவன் கருணையை மட்டும் அளக்க முடியாது. அது அளக்கவொண்ணாத அருட்கங்கை.

# V - பிற நகரச் சத்திரங்கள்

காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திர மேலாண்மைக் கழகத்தின் நிர்வாகத்திற்கு உட்பட்டுப் பல தலங்களில் நகரச்சத்திரங்களும், ஆலயங்களும் சிறப்பாகப் பணியாற்றுகின்றன. அவற்றுள் பிரயாகை, அயோத்தி, நாசிக் – பஞ்சவடி, கயா, கல்கத்தா ஆகிய தலங்களில் உள்ள சத்திரங்கள் குறிப்பிடத்தக்கவை.

## பிரயாகை நகரச்சத்திரம்

அலகாபாத் நகருக்குப் பெயரிட்டவர் அக்பர் பாதுஷா. அல்லாவுக்குப் பிரியமான நகரம் என்று இதற்குப் பொருள். நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் இங்கே சத்திரம் கட்டி நடராஜப் பெருமானை எழுந்தருளச் செய்து, அல்லாவுக்குப் பிரியமான நகரத்தை அகிலேசருக்குப் பிரியமான நகரம் என்று அறிவித்துவிட்டார்கள்.

அலகாபாத் ரயில் நிலையத்திலிருந்து சுமார் 6 கிலோமீட்டர் தொலைவில், தாராகஞ்ச் ரயில் நிலையத்துக்கு மிக அருகில் திரிவேணி சங்கமத்துக்கு அண்மையில் இச்சத்திரம் கட்டப் பட்டுள்ளது. 1891 முதல் இடங்கள் வாங்கப்பட்டுச் சத்திரமும் நந்தவனமும் அமைக்கப்பெற்றன.

அண்மையில் இச்சத்திரத்தின் ஒரு பகுதி புதுப்பிக்கப்பட்டு சுமார் 50 பேர் படுக்கும் அளவில் பெரிய அறை கட்டப்பட்டுள்ளது.

மரணத்தின் எல்லையில் நிற்பவர்களுக்கு, கங்கை நீரைக் கொடுப்பது மரபு. கண் இமைகளிலும் நாவிலும் ஊற்றப்படும் கங்கைநீர் பிரயாகையில் இருந்துதான் எடுத்து அனுப்பப்படுகிறது. சத்திரத்தில் வாடிக்கையான படகுக்காரர் இருக்கிறார். உரிய வாடகைக்குப் படகுகளை ஏற்பாடு செய்து கொள்ளலாம். சத்திர மேலாளர் நம் தென்னிந்திய உணவு தயாரித்துத் தருவார்.

## அயோத்தி நகரச்சத்திரம்

"திருமடந்தை மண்மடந்தை இருபாலும் திகழ", அரவணையில் வீற்றிருந்த ஆதிநாராயண மூர்த்தி, அவதாரம் செய்யத் தேர்ந்தெடுத்த இடம் அயோத்தி. சைவத்தையும் வைணவத்தையும் இரண்டு கண்களாக நினைத்து வளர்த்த நகரத்தார்கள் அயோத்தியில் சத்திரம் கட்டி, அந்தச் சத்திரத்தில் இராமர் கோவிலும் கட்டினார்கள்.

அயோத்தி புகைவண்டி நிலையத்திலிருந்து சுமார் மூன்று கிலோமீட்டர் தொலைவில், பைசாபாத் நகரிலிருந்து சரயு நதிக்குச் செல்லும் பெரிய சாலையில்

துளசிதாஸ் பூங்காவுக்கு அருகில், இரண்டு யாத்திரைக்கட்டுகள் கொண்ட பெரிய சத்திரம் 1883 ல் கட்டப்பட்டது. அது முதல் 1942 வரை இங்கு அன்னதானம் நடைபெற்றது.

சத்திரத்தில் உள்ள இராமர் கோவிலில் கோதண்டராமன் எழுந்தருளி இருக்கிறான். இப்பெருமான் பேரழகு சொல்லுக்கு அடங்காதது. கண்டவர்கள் கண்படும் என்று கூறும் அளவுக்குக் கருணை மாமுகில் காட்சிதரக் காண்கிறோம்.

"மையோ ? மரகதமோ ? மறிகடலோ ? மழைமுகிலோ ?

ஐயோ இவன் வடிவென்பதோர் அழியா அழகுடையான்"

என்று கம்பன், சொல்லில் வடித்த சுடர் ஓவியத்தைச் சிற்பி கல்லில் வடித்துக் காட்ட நினைத்து, அது முடியாமல், ஐம்பொன் திருமேனியில் அழகாய்க் காட்டியிருக்கிறான். அயோத்தியில் உள்ள நூற்றுக்கணக்கான இராமன் திருமேனிகளில் இதுவே மிக அழகானது. இந்த அழகில் மயங்கி சீதை, இலக்குவன், பரதன், சத்ருக்னன், அனுமன் ஆகியோர் சுற்றி நிற்கின்றனர். நூற்றுக்கணக்கான சாளக்கிராமங்கள் இங்கே வைத்து வழிபடப் பெறுகின்றன. நகரத்தார்கள் இவ்வூரில் தேர்த்திருவிழாவே நடத்தி இருப்பதாகத் தெரிகிறது. சரயு நதிக்கரையில் உள்ள நாகநாதர் கோவிலுக்குப் பூசை, அபிடேகப் பொருட்கள் காசிச் சத்திரத்தாரால் அனுப்பப்பட்டு வருகின்றன. அயோத்தி ரயில் நிலையத்தில் இறங்கி நாட்கோட் ஸ்ரீராம் மந்திர், பாபு பஜார் என்று சொன்னால் நகரச்சத்திரத்தில் ஆட்டோக்காரர்கள் கொண்டு வந்து விடுவார்கள்.

### நாசிக் - பஞ்சவடி - நகரச்சத்திரம்

மகாராஷ்டிரத்தில் ஒரு மாவட்டத்தலை நகரம் நாசிக். இதன் எதிர்க்கரையில் உள்ளது பஞ்சவடி. "சான்றோர் கவி எனக்கிடந்த கோதாவரியினை வீரர் கண்டார்". என்று கவிச் சக்கரவர்த்தி கம்பர் பாடும் கோதாவரியின் இருபுறங்களிலும் இவை உள்ளன. நாசிக்கில் தான் ரூபாய் நோட்டுக்கள் அச்சிடும் அச்சகம் உள்ளது. பஞ்சவடியில் தான் இராவணன் சீதையைத் தூக்கிச் சென்றான். கரன் திரிசிரன் வதை, சூர்ப்பனகை மூக்கறுபட்டது எல்லாம் இங்கேதான். பஞ்சவடிக்கு அருகில் ஜோதிர்லிங்கத் தலமான திரியம்பகம் உள்ளது. மகாசிவராத்திரியில் தேவகோட்டை அரு. அரு. குடும்பத்தார் இந்த ஆலயத்தில் ருத்ர அபிஷேகம் செய்கிறார்கள். திரியம்பகத்தில் தான் கோதாவரி உற்பத்தியாகிறது.

இவ்வளவு சிறப்புக்களையும் அறிந்த பம்பாய் நகரத்தார் பெருமக்கள் 1865ல் நாசிக்கில், மேடான பகுதியில், இடம் வாங்கிச் சத்திரமும் சத்திரத்துக்குள்

தண்டாயுதபாணி கோவிலும் கட்டினார்கள். கோதாவரி ஆறு, இராமர் கோவில், சீதைகுகை ஆகியவற்றுக்கு அருகில், கோதாவரியில் வெள்ளம் வந்தாலும் பாதிக்காதபடி இதைக்கட்டிய நகரத்தார்களை எவ்வளவு பாராட்டினாலும் பொருந்தும். இச்சத்திரத்தில் எழுந்தருளியுள்ள தண்டாயுதபாணி கார்த்திக் சுவாமி என்று வடநாட்டவர்களால் வழிபடப் பெறுகிறார். கந்தர்சஷ்டி, திருக்கார்த்திகை, தைப்பூசம், பங்குனி உத்திரம் ஆகிய விழாக்கள் இங்கு மிகச் சிறப்பாக நடக்கின்றன. இவ்விழாக்களில் பம்பாய் நகரத்தார் சங்கத்தின் பணி மிகவும் பாராட்டத்தக்கது.

இச்சத்திரத்துக்கு எதிரில் உள்ள இடம் 1905ல் வாங்கப்பட்டது. இது பழைய கட்டிடம். ஒரு பகுதியில் பஞ்ச முகலிங்கம் உள்ளது. ஒரு பகுதி அஞ்சல் அலுவலகத்துக்கு வாடகைக்கு விடப்பட்டது. இக்கட்டிடத்தின் ஓரத்தில் உள்ள சந்து நகரத்தாரைச் சேர்ந்தது என்று 1959ஆம் ஆண்டிலும் 1961ஆம் ஆண்டிலும் இரண்டு தீர்ப்புகள் நாசிக் நீதிமன்றத்தால் வழங்கப்பட்டுள்ளன.

இப்பொழுது இச்சத்திரம் மிகச் சிறப்பாகப் பழுது பார்க்கப்பட்டுள்ளது. புதிய அறைகள் கட்டப்பட்டுள்ளன. தண்டபாணி கோவிலும் திருப்பணி செய்யப்பட்டு 9–9–1992ல் திருக்குட நன்னீராட்டும் செய்யப்பெற்றது.

இது பம்பாயிலிருந்து 188 கிலோ மீட்டரில் உள்ளது. பூனாவிலிருந்து 193 கிலோமீட்டர் தூரத்தில் அமைந்துள்ளது. இரயில்நிலையம் நாசிக்ரோடு என்று அழைக்கப்படுகிறது.

### கயா - நகரச்சத்திரம்

கல்கத்தாவில் தொழில் செய்து வந்த நகரத்தார்கள் 1884ல் சந்த்சவுரா என்ற இடத்தில் ரூ. 2500க்கு இடம் வாங்கிக் கட்டிடம் கட்டினார்கள். அதன்பிறகு 1911ஆம் ஆண்டிலும் 1928ஆம் ஆண்டிலும் பக்கத்து இடங்கள் வாங்கப்பட்டு, செட்டிநாட்டு மரபுப்படி கட்டிடம் பெரிதாகக்கட்டப்பட்டது. முன்புறமுள்ள ஹாலில் நடராஜர் திருவுருவம் உள்ளது. முறைப்படி வழிபாடுகள் நடக்கின்றன. 1942 வரை நாள்தோறும் அன்னதானம் நடந்துவந்தது. இங்கே விஷ்ணுபாதத்தில் நூறு ஆண்டுகளாக நகரத்தார் பாலபிஷேகம் செய்தும் நெய்த்தீபம் ஏற்றியும் வழிபட்டு வருகிறார்கள். விஷ்ணுபாதம் இருக்கும் மண்டபத்திலேயே நகரத்தார்கள் ஒரு சிவலிங்கத்தையும் அம்மனையும் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். 1942 வரை விஷ்ணு பாதத்தில் சந்தனக்காப்புச் சாத்தி வந்திருக்கிறார்கள். நகரத்தார்களுக்கென்று இவ்வூரில் பண்டாக்களும் சாஸ்திரிகளும்

நியமிக்கப்பட்டுள்ளார்கள். இவர்கள் சிரார்த்தம் முதலியவற்றை உரிய தொகையை மிக நியாயமான முறையில் பெற்றுக் கொண்டு சிறப்பாகச் செய்து தருகிறார்கள். இப்பொழுது இச்சத்திரம் புதுப்பிக்கப்பட்டுள்ளது. சத்திரமேலாளரிடம் சொல்லிவிட்டால் எல்லா ஏற்பாடுகளும் செய்து தருவார். சுவையான உணவும் அளிப்பார்.

## நகரத்தார் ஹவுஸ் - கல்கத்தா

நகரத்தார்கள் கல்கத்தாவில் மிகச்சிறப்பாகத் தொழில் செய்தனர். 1918ல் கல்கத்தா நகரத்தார்களின் கடைகள் பதின்மூன்றாகக் குறைந்தன. இந்தப் பதின்மூன்று பெட்டியடிகளும் ஒரேகட்டிடத்தில் இருக்க வேண்டும் என்று, கல்கத்தாவில் எஸ்ரா தெருவில் உள்ள 34ஆம் எண் கட்டிடம், டேவிட் எஸ்ரா என்ற பெருஞ்செல்வரிடம் 5–7–1918ல் 127916–10–8க்கு (ஒரு லட்சத்து இருபத்தேழாயிரத்துத் தொளாயிரத்துப் பதினாறு ரூபாய், பத்தணா, எட்டுப்பைசாவுக்கு) வாங்கப்பட்டது. தர்மப் பணங்களையும் தங்கள் பணங்களையும் நகரத்தார்கள் பைசாச் சுத்தமாகச் சிக்கனமாகப் பயன்படுத்தியதற்கு இது மிகப்பெரிய சான்றாகும். அப்பொழுது பதினாறு அணா ஒரு ரூபாய். பனிரெண்டு பைசா ஓரணா. பைசாவுக்கும் நல்ல மதிப்பிருந்தது.

இந்தக் கட்டிடம் முழுவதுமாகப் பிரிக்கப்பட்டது. செட்டிநாட்டுக் கட்டிடங்கள் போல் தினேஸ்சந்தர் சென் என்ற ஒப்பந்தக்காரர், கட்டிக்கொடுத்தார். கட்டிடப்பணி 23–8–1920ல் தொடங்கப்பெற்று 2–11–1921ல் நிறைவேறியது. மொத்த இடப்பரப்பு 6120 சதுரஅடி. இதில் சிங்கார முருகேசர் கோவில் கட்டப்பட்டுக் குடநீராட்டும் நிகழ்ந்தது. 27–8–1958 முதல் இது நகரத்தார் ஹவுஸ் என்று அழைக்கப்பட்டுவருகின்றது. 1942ல் ஜப்பானியர் பர்மாவைக் கைப்பற்றினர். நகரத்தார்களும், அவர்களைச் சேர்ந்தவர்களும் கால்நடையாக அகதிகளாக இந்தியாவுக்கு வந்தனர். அவர்கள் தங்க இடமளித்து, உணவும்தந்து, மருத்துவ வசதியும் செய்து, ஊருக்குப் போகப் பயணச்சீட்டும் வாங்கித்தந்து இச்சத்திரம் பெரும் பணியாற்றியது.

## நகரேஸ்வரர் கோவில் - கல்கத்தா

இது கல்கத்தாவில் ஸ்ட்ராண்டு சாலையில் 35ஆம் எண்ணுள்ள கட்டிடத்தில் அமைந்துள்ளது. அரசமரத்தடியில் முன்பு, சிவலிங்கம் இருந்தது. இந்தப் பெருமானுக்கு நகரத்தார்கள் நகரேசுவரர் என்று பெயரிட்டனர். நகரேஸ்வரியையும் பிரதிஷ்டை செய்தனர். கோவில் கட்டிக் குடநீராட்டும் செய்து, வழிபட்டு

வருகின்றனர். பூஜைச் செலவுகள் காசிநாட்டுக்கோட்டை நகரச்சத்திர மேலாண்மைக்கழகத்தால் செய்யப்பட்டு வருகின்றன. இக்கோவிலில் சிங்கார முருகேசர், இடும்பன், விநாயகர் ஆகிய மூர்த்திகள் இப்பொழுது எழுந்தருளி இருக்கிறார்கள். கங்கைக் கரையில் இந்த ஆலயம் அமைந்துள்ளது. நாள்தோறும் நூற்றுக்கணக்கான இந்துக்கள் வழிபாடு செய்கிறார்கள்.

**காளிகாட்**

கல்கத்தா நகரத்தார் ஹவுசிலிருந்து எட்டு கிலோ மீட்டர் தொலைவில் ஆதி கங்கை எனப்படும் காளிகாட் ஆற்றின் கீழ்க்கரையில் காளிகோவில் அருகே அமைந்துள்ளது இக்கட்டிடம். 1878, 1885, 1893 ஆகிய ஆண்டுகளில் இடம் வாங்கப்பெற்று சித்ரா பௌர்ணமியன்று சிங்கார முருகேசர் எழுந்தருளும் திருவிழாவுக்கேற்ப இரண்டு மாடிக்கட்டிடமாகக் கட்டப்பெற்றது. திருவிழா நின்ற பிறகு யாத்திரைப் பயணிகள் தங்கினர். கட்டிடம் பழுதடைந்த நிலையில் உள்ளது. வாடகைக்கு விடப்பட்டுள்ளது.

**தாரகேசுவரம்**

வங்காளிகளின் புனிதத்தலம் தாரகேசுவரம். இது ஹவுராவிலிருந்து சுமார் 55 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. தாரகேசுவரர் சுயம்பு லிங்கம். இது மகந்துப் பிரதேசம். 1890ல் மகந்திடம் இடம் வாங்கிக் கல்கத்தா நகரத்தார் பதினாயிரம் ரூபாய் செலவில் மடம் கட்டினர். இம்மடத்துக்குள் ஒரு நந்தவனம் உள்ளது. 1941 வரை தாரகநாதருக்கு நகரத்தார்கள் நாடோறும் பாலபிஷேகம் செய்தனர். வங்காளிகள் இம்மடத்தை செட்டிபாடி என்கிறார்கள். ரயில் நிலையத்திலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் வெட்டிய குளம் ஒன்றும் இங்குள்ளது. மடம் பழுதடைந்துள்ளது. சில பகுதிகள் வாடகைக்குவிடப்பட்டுள்ளன.

*நூறாண்டு காலமாய் நோன்புடன் நடக்கும்*
*நாட்டுக் கோட்டை நகரச் சத்திரம்*
*போற்றத் தகுந்த மிகப்பெரும் புண்ணியம்*

- *நாமக்கல் கவிஞர்* **இராமலிங்கம்பிள்ளை**

# VI - நகரத்தார்களும் காசியும்

காசியில் நகரத்தார் திருத்தொண்டு "நீளும் இத்தொண்டின் நீர்மை நினைக்கில் யார் அளக்க வல்லார்?" என்று சேக்கிழார் பெருமான் பாடுவது போல, மிகவும் வியந்து போற்றத்தக்கது. கங்கையில் நீராடி, அகிலேசனை வணங்கி, உலகுக்கெல்லாம் அன்னமளிக்கும் அன்னபூரணியை வணங்கிவரும் அடியார்களுக்கு அன்னம் பாலிப்பது புண்ணியத்திலும் பெரும் புண்ணியமாகும்.

வண்மையே குலதர்மம் எனக்கொண்டார்
தொண்டொன்றே வழியாக்கொண்டார்
ஒண்மைஉயர் கடவுளிடத்து அன்புடையார்

என்று பாரதி பாராட்டிய நகரத்தார் பெருமக்கள் இப்பணியைப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே செய்து வருவது நினைப்பிற்கும் எட்டாத நெடுந்தரும நெறியன்றோ!

காசிநகரத்துக் கடவுளரைப் பேச வைத்தால்
காவிரிப்பூம்பட்டினத்தார் கலை உணர்ச்சி தோன்றவரும்

என்ற கவியரசு கண்ணதாசனின் வைர வரிகளின் பொருள் காசிக்குப் போய்ப் பார்த்தவர்களுக்குத் தான் தெரியும். பயண வசதிகள் இல்லாத அந்தக் காலத்திலேயே வடநாடு சென்று அறநிலையங்கள் அமைத்தது நகரத்தாரின் அறமன இயல்பைக் காட்டுகிறது. காசிக்குச் சென்று நகரத்தார்கள் திருப்பணி செய்த காரணத்தால் தானே, தமிழ்நாட்டுக்கே வந்து ஒவ்வொரு கோவிலிலும் காசி விசுவநாதரும் விசாலாட்சி அம்மையும் காட்சி கொடுக்கிறார்கள்? நம் ஊர்க் கோவில்களில் அர்ச்சகர்களாலும் தீண்டாத் திருமேனியோடு விளங்கும் இறைவன், காசியில் எல்லோராலும் தீண்டும் திருமேனியோடு, பக்தர்க்கெளிய பரம்பொருளாக விளங்குகிறார். இதை உணர்ந்த நகரத்தார்கள் அப்பெருமானைத் தொட்டுப் பார்த்துச் சுகம் பெறுவதற்காக மூன்று காலப் பூசைகளை முறையாகச் செய்வது எவ்வளவு பெரிய புண்ணியப் பேறு! வாழ்வில் பசி இரண்டு வகை. ஒன்று உடற்பசி மற்றொன்று உயிர்ப்பசி. உணவு உண்டு அனுபவித்தால் உடற்பசி தீரும். இறைவழிபாட்டால் உயிர்ப்பசி தீரும். நகரத்தார்கள் இறைவழிபாட்டில் தலைசிறந்தவர்கள். தாலாட்டுப் பாட்டில் கூட

மலரெடுத்துப் பூசை செய்யும் மகராசா பேரேனோ?
பூவெடுத்துப் பூசை செய்யும் புண்ணியவான் பேரேனோ?
அரும்பெடுத்துப் பூசைசெய்யும் அர்ச்சுனனார் பேரேனோ?
மொட்டெடுத்துப் பூசைசெய்யும் முதலாளி பேரேனோ?

என்று பாடக்கூடிய மரபு இது. அதனால் தான் காசி விசுவநாதப் பெருமான், தன்னுடைய பணிக்காக இப்பெருமக்களை இழுத்துக்கொண்டான்.

நமசிவாய என்பது மந்திரங்களில் தலையாய மந்திரம். திருவாசகம் இந்த ஐந்தெழுத்தில் தான் தொடங்குகிறது. இம்மந்திரத்தில் முதல் எழுத்து நகரம். நகரத்தார் என்ற பெயர் இந்த நகரத்துக்குரியவர் என்றும் பொருள்படுமாறு அமைந்திருப்பது நகரத்தார்களின் தவப்பயன். "தனக்குக்கண்டு மிஞ்சினால் தான் தானம் பண்ண வேண்டும்" என்று நினைக்கும் உலகத்தில் "தனக்கும் மிஞ்சியது தானம்" என்று அறப்பணி செய்த நகரத்தார்கள் இறைவன் திருப்பணியில் ஒல்லும் வாயெல்லாம் ஓவாது ஈடுபட்டார்கள். வடநாட்டில் சத்திரம் கட்டித் தருமம் செய்த போது அவர்கள் செய்த பல அருஞ்செயல்கள் வியக்கத்தக்கவை. அவர்கள் புகழ்விளக்கும் சில நிகழ்ச்சிகள் கீழே தரப்பட்டுள்ளன.

1. காசி நகரச்சத்திரத்தில் உள்ளது நகரேசுவரர் கோவில் இக்கோவிலுக்கு அருகே உள்ள வங்காளிக் குடும்பத்தினர் மீன் இல்லாமல் சாப்பிடுவதில்லை. நாள்தோறும் மீன் எலும்புகள் நகரேசுவரர் கோவில் வாயிலில் கிடந்தன. நகரத்தார்கள் மனம் வருந்தினர். பலமுறை சொல்லியும் பலனில்லை. இறுதியில் அந்த வங்காளியின் வீட்டையே விலைக்கு வாங்கிக் காசிச்சத்திரத்தின் உடைமையாக்கிவிட்டனர். இது நகரத்தார்களின் சிவப்பற்று செயல் ஊக்கம், செல்வாக்கு, நினைத்த நற்செயலை நிறைவேற்றும் நெஞ்சுரம் இவற்றுக்கு அடையாளமாக இன்றும் விளங்குகிறது.

2. ஐப்பசி முதல் மார்கழி முடிய நமக்குக் குளிர் அடிக்கிறது. கம்பளிச் சட்டை போடுகிறோம். இது போலக் காசி விசுவநாதப் பெருமானுக்கும் குளிர் அடிக்குமே என்று ஒரு பக்தர் மனம் நினைத்தது. தண்ணளிசுரக்கும் அன்னையை இடத்தில் தாங்கித் தண்ணீர் பெருகும் கங்கையைச் சடையில் தாங்கிய பெருமானுக்குச் சந்தனத்தால் அபிஷேகம் செய்கிறார்களே, குளிர் அதிகமாக இருக்குமே, எம்பெருமான் எப்படித் தாங்குவான்? என்று அந்த நகரத்தாரின் தாயுள்ளம் விசுவநாதக் குழந்தைக்காக வேதனைப்பட்டது. இந்த வேதனையை மாற்றக் காசி நகரச் சத்திரம் பொறுப்பேற்றுக் கொண்டது. ஐப்பசி மாதம் வசந்த பஞ்சமியிலிருந்து

மாசி மாதம் சிவராத்திரிவரை, விசுவநாதருக்குக் குளிர்காலச் சட்டை (மக்மல்பட்டு) அணிவிக்க அறக்கட்டளை ஏற்படுத்தப்பட்டு, அவ்வாறே அணிவிக்கப்பட்டும் வருகிறது. பக்தி, பரமனுக்கே சட்டை போட்டுப் பார்த்தது. பரமனும் கட்டுப்பட்டுப் பக்திக்கு மதிப்பளித்தான்.

3. காசி நகரச்சத்திரம் நகரத்தார் திருப்பணிகளுக்குச் சிகரமாக விளங்குகிறது. இதில் ஒரே சமயத்தில் ஆயிரக்கணக்காணவர்கள் வசதியாகத் தங்க முடியும். ஆலயத்துக்கு அருகில் உள்ள காசி நகரச்சத்திரத்தில் தங்கியிருந்து நகரத்தார் திருப்பணிகளைப் பாராட்டிய பெருமக்கள் பலர். அவர்களில் இந்தியக் குடியரசின் தலைவராகப் பணியாற்றிய தத்துவ மேதை சர்வபள்ளி இராதாகிருஷ்ணன், பெருந்தலைவர் காமராசர், ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். கிருபானந்தவாரியார் சுவாமிகள், கி. வா. ஜகன்னாதன் போன்ற பல தமிழ்ச்சான்றோர்கள் சத்திரத்தின் பணிகளை வியந்து பாராட்டி உள்ளனர்.

4. காசி விசுவநாதப் பெருமானுக்கு நிகழும் நான்கு பூசைகளில் மூன்று பூசைகள் நகரத்தார்களால் நடத்தப்படுகின்றன. அதிகாலை உஷத்கால பூஜை, உச்சிக்கால பூஜை, அர்த்தஜாம பூஜை ஆகிய மூன்றும் காசிச் சத்திரத்திலிருந்து நடத்தப்படுகின்றன. உச்சிக்காலத்திலும் அர்த்த ஜாமத்திலும் நகரத்தார்கள் பெயருக்கு அர்ச்சனை செய்யப்படுகிறது.

5. விசுவநாதருக்கு அதிகாலை 3 மணிக்கு நிகழும் உஷத்கால பூஜையில் பத்தாஸ் மிட்டாயும், உச்சிக்காலத்தில் பருப்புப் பொங்கலும், அர்த்த சாமத்தில் சர்க்கரைப் பொங்கலும் ஏகாதசி நாளில் அல்வாவும், சோமவார உச்சிக்காலத்தில் பூரியும் நைவேத்தியங்கள் ஆகும். இவை நகரத்தார் உபயங்கள். நகரச்சத்திரத்திலிருந்து அனுப்பப்படும் பொருட்களிலிருந்து கோவில் மடைப்பள்ளியில் செய்யப்படுகின்றன.

6. காசி விசுவநாதருக்கு மேள தாளத்தோடு நடக்கும் பூஜைகள் உச்சிக்கால பூஜையும் அர்த்தசாம பூஜையுமே ஆகும். இதற்காகக் காசி நகரச் சத்திரத்தில் மேளக்காரர்கள் அமர்த்தப்பட்டிருக்கிறார்கள். இன்னிசை வீணையில் இசைந்த பெருமானுக்குக் குழல்ஒலி கேட்பிக்கும் பேறு நகரத்தார்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ளது.

7. அர்த்த சாம பூசையில் விசுவேசருக்கு அணிவிக்கப்படும் நாக ஆபரணம், சொர்ணக்கிரீடம், பள்ளியறைக்கு வெள்ளிக்கட்டில், நைவேத்தியம் வைப்பதற்குரிய

நாற்காலிகள், கங்கை நீர் வைப்பதற்குத் தாமிர அண்டா, கோபுரத்தின் மீதுள்ள மெர்க்குரி விளக்கு, கருவறையைச் சுற்றி நான்குபக்கமும் போடப்படும் திரைச்சீலை, வெள்ளியால் செய்யப்பட்ட தீபங்கள் ஆகிய அனைத்தும் நகரத்தார் திருப்பணிகள் ஆகும். விசுவேசர் கோவில் மடைப்பள்ளியும் நகரத்தார்களால் கட்டிக் கொடுக்கப்பட்டதே ஆகும்.

8. கேதார ஈஸ்வரர் கோவிலில் சுற்றுப்பிரகாரத்தில் காணப்படும் மீனாட்சியம்மன், சொக்கலிங்கப்பெருமான் ஆகிய மூர்த்திகள் கல்கத்தா நகரத்தார்களால் பிரதிஷ்டை செய்யப்பட்டன. பூசைச் செலவும் நெடுங்காலம் அவர்களால் ஏற்கப்பட்டது.

9. காசிச்சத்திரத்தில் உள்ள தங்க விசாலாட்சியின் திருவுருவம் பேரழகுடையது. கலையார்வம் மிக்க நகரத்தார்கள் இதைச் செய்திருக்கிறார்கள். ஆண்டில் மூன்று நாட்கள் மட்டுமே இந்த அம்மனைத் தரிசிக்கலாம். தீபாவளிக்கு முதல்நாளும் தீபாவளி அன்றும் அதற்கடுத்த நாளும் மட்டுமே இந்தத் திருவுருவம் காணக்கிடைக்கும். இந்த அம்மனுக்குரிய வெள்ளித்திருவாச்சி, வெள்ளி விநாயகர், வெள்ளிச் சங்கு முதலியனவும் கலையழகுடையவை. இவற்றைக் காண்பதற்காகவே தீபாவளியையொட்டி மிகப்பெருங்கூட்டம் சத்திரத்துக்கு வருகிறது.

## விசாலாட்சி திருக்கோவில்

காசிவிசா லாட்சி; கயற்கண்ணி; காமாட்சி;
தேசுமிகும் மூன்றுபெருந் தெய்வங்கள்;– பூசனையில்
ஒன்றும் குறையாமல், உள்ளம் உருகிநின்றால்
நன்றருளிக் காப்பர் நயந்து

என்று தமிழ்பாடும் தெய்வங்கள் மூன்றில் காசி விசாலாட்சி திருக்கோவில் விசுவநாதர் கோவிலுக்கு அருகில் நகரத்தார்களால் 1893ல் கட்டப்பெற்று அவர்கள் நிர்வாகத்திலேயே இருந்து வருகிறது.

கருவறையில் சுயம்புவாக உள்ள பழைய விசாலாட்சி திருவுருவத்துக்கு முன்புறம், புதிய திருவுருவம் செய்து வைக்கப்பெற்று வழிபடப்பட்டு வருகிறது. உற்சவமூர்த்தியும் உள்ளது. நவராத்திரியில் கொலுவிருந்து அம்புபோடும் வழக்கமும் உண்டு. பேராற்றல் பெற்றவளும் பெருங்கருணை வாரிதியும் ஆன இந்த விசாலாட்சியம்மனுக்குத் தங்க விக்கிரகமும் வெள்ளித் திருவாச்சியும்

செய்யப்பட்டுள்ளன. விசாலாட்சி அம்மனின் புதிய திருமேனி 1971ல் தேவகோட்டை ப.ராம. செ. ராம. இராமநாதன் செட்டியார் அவர்களால், பொள்ளாச்சியில் செய்யப்பெற்றது. காசிக்குக் கொண்டுவந்து சேர்க்கும் செலவையும் அவர்களே ஏற்றுக் கொண்டார்கள். இவ்வுருவத்துக்கு வெள்ளி அங்கி காரைக்குடி சி.ப. சித. உமையாள் ஆச்சி அவர்களால் செய்து கொடுக்கப்பெற்றது. இந்தக் கோவில் விசாலாட்சி கட்டம் என இப்போது வழங்கப்படும் பகுதியில் கங்கைக்கரையருகே குறுகிய தெருவில் உள்ளது. கல்கத்தா நகரத்தார்கள் மிகச் சிறிய அளவில் கட்டப்பெற்றிருந்த விசாலாட்சி அம்மன் கோவிலையும் அதன் பூஜா உரிமைகளையும் பண்டாக்களிடமிருந்து எழுத்து மூலமாகப் பெற்றனர். 1890ல் கோவிலுக்கு அருகில் காசி மன்னருக்குச் சொந்தமான இடத்தை கோவிலுக்குத் தருமசாசனமாகப் பெற்றனர். திருப்பணி நடந்து 1893ல் கோவில் கட்டி முடிக்கப்பெற்றுத் தமிழ்நாட்டு முறைப்படி வழிபாடுகள் தொடங்கப் பெற்றன. இக்கோவிலில் பணியாற்றிய பண்டாக்கள் இருந்த வீடுகளையும் கல்கத்தா நகரத்தார் விலைக்கு வாங்கினார். பத்திரம் பதிந்தனர். பிறகு அந்த வீடுகளில் அவர்கள் தொடர்ந்து இருந்துவர இசைவும் வழங்கினர் இந்த ஆலயத்தில் 7-2-1908, 1-11-1971, 22-11-1985, 10-11-1999 ஆகிய நாட்களில் திருக்குட நன்னீராட்டுகள் நடைபெற்றன.

## நகரத்தார் மீதுகொண்ட நம்பிக்கை

தெய்வபக்தி மிக்கவர்களாகவும், திருத்தொண்டில் முன்னிற்பவர்களாகவும், நாணயம் தவறாதவர்களாகவும் நகரத்தார்கள் விளங்கியதைக் காசியில் உள்ள பொதுமக்களும் நீதிமன்றமும் உணர்ந்து நகரத்தார் மீது பெரும் நம்பிக்கை வைத்தனர். நகரத்தார்களும் அந்த நம்பிக்கை மாறாமல் பார்த்துக் கொண்டனர்.

காசி விசுவநாதர் கோவில் மகந்துக்களுக்குச் சொந்தமானது. ஒரு சமயம் மகந்து பங்காளிகளுக்குள் கோவில் நிர்வாகம் பற்றிச் சச்சரவு உண்டாகி, அலகாபாத் நீதி மன்றத்தில் வழக்கு நடந்தது. மகந்துக்களுக்குள் ஒற்றுமை ஏற்பட வில்லை. இச்சூழ்நிலையில் காசி விசுவேசர் கோவில் நிர்வாகத்தை நாட்டுக்கோட்டை நகரத்தார்களே ஏற்க வேண்டும் என்று அலகாபாத் உயர்நீதி மன்றம் ஆணையிட்டது. அதன்படி நகரச்சத்திரத்தின் சார்பில் நிர்வாகக்குழுத்தலைவர் தேவகோட்டை அள.சுப.பழ. சுப்பிரமணியன் செட்டியார் கோவில் ரிசீவராக நியமிக்கப்பட்டு இரண்டாண்டுகள் பணியாற்றினார்கள். நகரத்தார்களின் தெய்வபக்தியும் சீலமும் வட இந்திய மக்களால் பெரிதும் மதிக்கப்பட்டமைக்கு இது மிகச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

# VII- நகரத்தார் பெருமக்களுக்கு வேண்டுகோள்

பெறுதற்கரிய விசுவநாதப் பெருமான் பூசையும், காசிச்சத்திரமும், நம்முடைய முன்னோர்களின் பெரும்பணியால் நமக்குக் கிடைத்திருக்கின்றன. இவற்றை நாம் முறையாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டாமா? கட்டிய சத்திரத்தைக் காப்பாற்றுவதும் தொடங்கிய திருப்பணிகளைத் தொடர்ந்து நடத்துவதும் தவிர நம் முன்னோர்களுக்கு நாம் என்ன கைம்மாறு காட்ட இயலும்? சத்திரத்துக்குப் பணி செய்யவும் சத்திரத்தைப் பயன்படுத்திக் கொள்ளவும் கீழ்க்கண்ட விதங்களில் செயலாற்ற நகரத்தார் பெருமக்களின் பாதம் பணிந்து வேண்டுகிறோம்.

1. நித்தியகட்டளையாக ஒவ்வொரு புள்ளிக்கும் ரூ. 1001 செலுத்தி, நீங்கள் குறிப்பிடும் நன்னாளில், உங்கள் பெயரில் காசி விசுவேசருக்கு அர்ச்சனை செய்து, பிரசாதம் அனுப்பச் சத்திரத்திற்கு வாய்ப்பளியுங்கள்.

2. காசியில் நகரத்தார் ஏற்படுத்தியுள்ள கட்டளைகளில் உங்களுக்கு விருப்பமான கட்டளைகளுக்கு உதவி செய்யுங்கள்

3. காசிக்கு வந்து செல்பவர்கள் கட்டாயமாகப் பாதாள ஈஸ்வரருக்கு அபிஷேகம் செய்து செல்லுங்கள். அவர் பெருஞ்சித்தர். பேரருளாளர். நினைத்த காரியம் நடத்தி வைப்பவர். அவரை வணங்கிவிட்டுத்தான் விடுதிக்குள் நுழைய வேண்டும். அவரிடம் சொல்லிக் கொண்டு தான் காசியிலிருந்து செல்ல வேண்டும். கவலைகளை அவரிடம் ஒப்படையுங்கள். காசிக்கு அடிக்கடி வந்து செல்லுங்கள்.

4. மோட்ச தீபம் போட வேண்டுமானால் உடனே தகவல் கொடுங்கள். இறந்தவர் பெயர், விலாசம் தெரிவியுங்கள். பிறகு பணத்தை (ரூ. 100/–) அனுப்பி வையுங்கள். பணம் வந்து சேருமுன்பே மோட்சதீபம் போடப்பட்டுவிடும். பிற இனத்தாருக்குக் கிடைக்காத இந்தப் பெரிய வாய்ப்பை நகரத்தார் பெருமக்கள் நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

5. காசிப் பதியில் கங்கை நதியில் அஸ்தி கரைப்பது பழவினைப்பயனால்தான் கிடைக்கும். அஸ்தியைத் தனிப்பார்சலாக அனுப்பிவையுங்கள். அந்தப் பார்சலில் அனுப்பியவர் பெயரையும் எழுதச் செய்யுங்கள். மணியார்டர் மூலம் ரூ 101/– அனுப்பிவைத்துத் தனியாகக் கடிதம் எழுதுங்கள். வந்த நாளிலிருந்து ஓராண்டு வரை, அஸ்தி அதற்காக உள்ள லாக்கரில் வைக்கப்பட்டுப் பாதுகாக்கப்படும். அதற்குள் உரியவர்கள் வந்து அஸ்தியைக் கரைக்க வேண்டும். அதற்குமேல் ஆனால், சத்திரத்திலிருந்து அஸ்தி முறைப்படி கங்கையில் கரைக்கப்படும்.

6. காசிக்கு வரும் அன்பர்கள் கட்டாயம் கயாவுக்குச் சென்று வாருங்கள். நம்முடைய மரபில் பிறந்த எவனாவது கயாவில் வந்து நமக்குத் திதி கொடுக்க மாட்டானா – நாம் கடைத்தேற மாட்டோமா – என்று நம்முடைய முன்னோர்கள் கயாவில் ஆவி வடிவில் காத்திருக்கிறார்கள். அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமையைச் செய்யுங்கள். அவர்கள் வாழ்த்து நம்மையும் நம் குடும்பத்தையும் வாழ்விக்கும்.

7. தங்க விசாலாட்சி வெள்ளித் திருவாச்சியுடன் மரக் கேடயத்தில் காட்சி தருகிறாள். அவளுக்கு வெள்ளிக் கேடயம் செய்து வைக்க விரும்பும் நகரத்தார் முன்வந்து புண்ணியம் கட்டிக்கொள்ளுங்கள். திருப்பணிகள் தான் நகரத்தார் பிள்ளைகளை நல்ல நிலையில் வைத்திருக்கின்றன என்பதை அடிக்கடி நினைத்துக் கொள்ளுங்கள்.

8. காசி விசுவநாதருக்குத் தனி அபிஷேகம் சிறப்பாகச் செய்ய நினைத்தால், உரிய தொகையைப் பெற்றுக் கொண்டு சத்திரத்திலேயே நல்ல முறையில் ஏற்பாடு செய்து தருவார்கள். நீங்கள் உங்கள் திருக்கரங்களாலேயே விசுவநாதரைத் தொட்டுத் தொட்டு அபிஷேகம் செய்து ஆனந்திக்கலாம். நம் பகுதியில் கிடைக்காத இந்த அரிய வாய்ப்பை நழுவ விடாதீர்கள்.

9. காசியம்பதியில் ஐம்பத்து ஒன்பதாம் ஆண்டு நிறைவு விழாக்காணலாம்; மணிவிழாச் செய்து கொள்ளலாம்; சதாபிஷேகம் செய்து கொள்ளலாம்; அன்னதானம் செய்யலாம். இவை அனைத்திற்கும் நம் நகரச் சத்திரம் உதவி செய்கிறது. நம் ஊரில் செய்து கொள்வது போலச் செய்வதற்கு இங்கே வசதியும் வாய்ப்பும் உண்டு.

10. அந்திய காலத்தை அகிலேசன் சந்நிதியில் கழிக்க விரும்பும் அன்புத் தொண்டர்கள், காசி இந்துப் பல்கலைக்கழகத்திற்குத் தேர்வெழுதவரும் ஆடவர், பெண்டிர், அனைவரும் சத்திரத்தில் வசதியாகத் தங்கலாம். மகமைத் தொகையை ஒழுங்காகச் செலுத்துவதும் உணவுக்கு முன்கூட்டியே சொல்லி உரிய தொகையைச் செலுத்திச் சீட்டு வாங்கி வைத்துக்கொள்வதும் நம்கடமை என்பதைத் தயவு செய்து மறக்காதீர்கள்.

11. காசி மகா மயானம். சாவையே சாக வைத்த இடம். இங்கே எமனுக்கு வேலை இல்லை. இத்தலத்தில் தலைத்திதி சவண்டி ஆகியவை செய்வது சிறப்பு. அதற்கான ஏற்பாடுகளையும் நம் சத்திரத்தின் மூலம் செய்து கொள்ளலாம். உங்கள் விருப்பப்படி அன்னதானமும் செய்யலாம்.

### நன்றியும் சமர்ப்பணமும்

சுமார் 192 ஆண்டுகளாகக் காசி விசுவநாதப் பெருமானுக்கு, நகரத்தார் வழிபாடு நடந்து கொண்டிருக்கிறது. மூன்று பூஜைகளும் இடைவிடாமல் முறைப்படி நடந்து வருகின்றன. திருமுறைப்பாராயணம், வேதம் ஓதுதல், மேளதாளம் என்று இப்பணி வளர்ந்துகொண்டே வருகிறது. எண்ணிக்கையில் குறைவாக இருந்தாலும் எண்ணத்தில் நிறைவாக இருக்கின்ற நகரத்தார்கள் இந்த விசுவநாதர் பூஜையைத் தங்கள் உயிரினும் மேலாகக் கருதுகிறார்கள். இப்பணி வாழையடி வாழையாக வர வேண்டுமென நினைக்கிறார்கள். "கோடி கொடுக்கிறோம்" என்று கூறி இந்தத் திருப்பணியை எங்களுக்குக் கொடுங்கள்" என்று மன்னர்கள் கேட்டாலும் விடவில்லை. மடங்கள் கேட்டாலும் கொடுக்கவில்லை. "நகரத்தார்களுக்குச் சிவப்பணி செய்யக் கொடுத்துத்தான் பழக்கமே தவிர, அதை விற்று, வாங்கிப் பழக்கமில்லை. ஒரு நகரத்தார் உயிருடன் இருந்தால்கூட இதை விட்டுக்கொடுக்கமாட்டார்" என்று கூறிவிட்டார்கள். சிவப்பணியில் உறுதியுடைய இந்தத் திருத்தொண்டர்களின் திருவடிகளில் இந்த நூல் நன்றியுடன் சமர்ப்பிக்கப்படுகிறது.

தாமிரவருணிக் கரையில் பிறந்த குமரகுருபரர் காவிரிக்கரையில் உபதேசம் பெற்றுக் கங்கைக்கரையில காசி மடம் கட்டினார். காவிரிப்பூம்பட்டின வாசிகள், வெள்ளாற்றுக்குத் தெற்கே வந்து, திரைகடலோடித் திரவியம் தேடிக் கல்கத்தாவில் வாழ்ந்து கங்கைக்கரையில சத்திரம் கட்டினார்கள். காசிமடமும் காசிச் சத்திரமும் தமிழ்த்தாயின் இரு கண்களாகக் கங்கைக் கரையில் திகழ்கின்றன.

இரண்டிலும் அன்னதானமும் ஞானதானமும் ஆண்டவன் பூசையும்

அருந்தமிழ் போற்றலும் சிறப்பாக நடக்கின்றன. இரண்டையும்

வளர்ப்போம். இரண்டாலும் வளர்வோம்

எந்தத் தலபுராணத்தைப் பார்த்தாலும் இத்தலம் காசிக்குச் சமம் என்றோ காசியைவிட உயர்ந்தது என்றோ கூறப்பட்டிருக்கும். இப்படி ஒரு தலத்தை மற்ற எந்தத் தலத்தோடும் ஒப்பிடாமல் காசியுடன் ஒப்பிடுவதால், சிவராஜதானியாகிய காசிதான் தலங்களில் தலையாயது என்று தெரிகிறது. இத்தலத்தை நகரத்தார் காசி என்று அழைப்பதில்லை. ஸ்ரீ காசி எனறே அழைப்பார்கள்.

காசி உள்ளநர் காசி கேட்குநர்
காசி காணுநர் ஆசில் முத்தரே

என்றும்

காசியை நினைக்க முத்தி; காசி என்று உரைக்க முத்தி;
காசியைக் காண முத்தி; காசியைச் சூழ முத்தி;
காசியில் வசிக்க முத்தி; காசியைக் கேட்க முத்தி;
காசியில் வசிப்போர் தம்மைக் கண்டுதாழ்ந் திடுதல் முத்தி

என்றும் காசி ரகசியம் என்ற நூல் கூறுகிறது. இத்தகைய காசிப்பதியை வணங்குவோம். விசுவநாதப் பெருமான், தொழுது வழிபடும் அடியார் வீட்டில் அருளும் பொருளும் அள்ளித் தருவான்.

## திருவாரூர் மடப்புரம் தட்சிணாமூர்த்தி சுவாமிகளும், காசியும்

சுவாமிகளின் தம்பி நமசிவாயம். அவர் ஒரு பெரிய தவறு செய்து விட்டார். அந்த ஊர்ப் பிள்ளையார் கோவிலுக்குச் சொந்தமான தென்னந்தோப்பின் வழியாக நடந்து வந்த பொழுது, மரத்திலிருந்து விழுந்த தேங்காயை வெட்டித் தின்று விட்டார். "இது இறைவன் சொத்து. தின்னக்கூடாது" என்று சுவாமிகள் முன்னரே எச்சரித்திருந்தும் இப்படிச் செய்து விட்டார். சுவாமிகள் இதை அறிந்து தம்பியை அழைத்தார். "நீ செய்த தவறுக்கு ஒரேயொரு பிராயச்சித்தம் தான் உண்டு. அது காசிக்குப் பாதயாத்திரையாகச் செல். கங்கையில் தீர்த்தமாடி விசுவநாதரை வழிபட்டு மன்னிப்புக்கேள் காப்பாற்றப்படுவாய்" என்றார். தம்பி நமசிவாயம் அப்படியே காசியாத்திரை சென்று வழிபட்டுத் துறவியாகி விட்டார். இது சுமார் 180 ஆண்டுகளுக்கு முன் நடந்த நிகழ்ச்சி.

# காசி விஸ்வேசர்
# அர்ச்சனைப் பதிகம்

ஓசையாய் ஒலியாய் நிற்கும் ஓமெனும் பொருளே போற்றி!
நேசமாய் நினைக்கும் சான்றோர் நினைத்ததை முடிப்பாய் போற்றி!
பாசமும் பறறும் மாற்றிப் பழவினை ஒழிப்பாய் போற்றி!
காசியில் விசுவ நாதர் கழலிணை போற்றி போற்றி!

திங்களை முடியில் சூடித் திருவருள் புரிந்தாய் போற்றி!
மங்கையை ஒருபால் தாங்கி மனையறம் புரப்பாய் போற்றி!
பொங்கிய வெள்ளம் ஏற்றுப் புவிக்கருள் செய்தாய் போற்றி!
கங்கையாள் வடக்கு நோக்கும் காசியில் சிவமே போற்றி!

பொன்னுமெய்ப் பொருளும் செல்வ போகமும் கொடுப்பாய் போற்றி!
தன்முனைப் பில்லா தார்க்குத் தன்னையே தருவாய் போற்றி!
அன்னபூ ரணியாய்த் தோன்றி அறம்பல வளர்த்தாய் போற்றி!
மன்னுசீர் வார ணாசி மாதவப் பயனே போற்றி!

ஏர்வளர் காசி மண்ணில் எமபயம் கெடுத்தாய் போற்றி!
தீர்வரும் பிணிகள் காசிக் கயிற்றினால் தீர்ப்பாய் போற்றி!
நேர்வரும் பில்லி சூன்யம் நெருப்பென எரிப்பாய் போற்றி!
பார்வையால் ஈர்க்கும் கால பைரவா போறறி போற்றி!

அகத்தினில் இலிங்க மாகி அன்பரை அணைப்பாய் போற்றி!
நகரேசர் வடிவம் தாங்கி நலமுறக் காப்பாய் போற்றி!
மகிழ்வினைத் தந்து போற்றும் மணியென ஒளிர்வாய் போற்றி!
புகழ்விசா லாட்சி யோடும் பொலிந்திடும் சிவமே போற்றி!

செவிக்கமு தாக நிற்கும் தேவாரச் சொல்லே போற்றி!
கவிக்க முதாகத் தோன்றும் கற்பனை கடந்தாய் போற்றி!
தவிக்கு மோர் பெண்ணுக் காகத் தாயுமாய் வந்தாய் போற்றி!
புவிக்கமு தூட்டும் அன்ன பூரணி பங்கா போற்றி!

ஒப்பிலா அகல்யா பாயின் உயர்தவம் உவந்தாய் போற்றி!
செப்பும் ஈசான்ய திக்கில் சிறப்புற நகர்ந்தாய் போற்றி!
எப்புறம் திரும்பினாலும் இலிங்கமாய்த் திகழ்வாய் போற்றி!
முப்புரம் எரித்த காசி மூர்த்தியே போற்றி போற்றி!

சொல்லரும் சம்போ செல்லத் தொடர்ந்துசெல் ஒலியே போற்றி!
கல்லிலும் ஒளிவி ரிக்கும் கண்ணுதற் கடவுள் போற்றி!
நல்லற முனிவர் செய்யும் நற்றவப் பயனே போற்றி!
எல்லையில் அண்ட மெல்லாம் எழுந்தருள் புரிவாய் போற்றி!

தேசுடைக் குருபரர்க்குத் திருவருள் புரிந்தாய் போற்றி!
காசியில் மடம் அமைக்கக் காட்டிய கருணை போற்றி!
மாசிலாக் கருடன் தோன்றி வலம் வரச் செய்தாய் போற்றி!
வாசியாய் மாறித் தோன்றும் மந்திரப் பொருளே போற்றி!

பொய்யிலா நெஞ்சத் தார்க்குப் புலப்படும் பதமே போற்றி!
கையினால் அடியார் தீண்டக் களிப்புறும் கடவுள் போற்றி!
மைவருங் கண்டத் துக்குள் மறைந்தொளிர் சக்தி போற்றி!
ஐவரின் ஆட்டம் நீங்க ஆடிடும் அப்பா போற்றி!

தம்புகழ்க் கரைகா ணாத சங்கரர்க் கருள்வாய் போற்றி!
நம்பிரான் ஆகி வேத நாய்உடன் வந்தாய் போற்றி!
அம்பினால் ஆண்டு பார்த்தன் அணைக்கவே மகிழ்ந்தாய் போற்றி!
செம்பெலாம் ததும்பும் கங்கைத் தீர்த்தமே போற்றி போற்றி!

காசியில் இறந்தோர் ஆன்மா கடைத்தேற வைப்பாய் போற்றி!
மாசிலா மகாம யான மண்ணிலே நிலைத்தாய் போற்றி!
ஈசனாய் இறப்பைத் தானே இறக்க வைத்திடுவாய் போற்றி!
வாசமில் லாத பூவின் வாசமாய் மணப்பாய் போற்றி!

காசிக்கு நடந்து செல்லும் கால்களில் இருப்பாய் போற்றி!
காசி என் றுரைக்கும் நாவில் கவிமழை பொழிவாய் போற்றி!
காசியின் புகழைக் கேட்கும் காதுசெய் தவமே போற்றி!
காசியைக் கண்ணால் காணக் காட்டுவாய் போற்றி போற்றி!

தானந்தம் ஆதி இல்லாச் சாட்சியாம் பொருளே போற்றி!
வானந்தக் கங்கை பாயும் மணிமுடிச் சடையாய் போற்றி!
தேனுந்து கனியாய் எங்கள் சிந்தையில் இனிப்பாய் போற்றி!
ஆனந்த வனத்து ளாடும் அப்பனே போற்றி போற்றி!

பாலனுக் காக முன்னாள் பாற்கடல் கொடுத்தாய் போற்றி!
நீலமார் மணிகண் டத்து நின்மலச் சிவமே போற்றி!
சீலமும் தவமும் மிக்கோர் சேர்கதி ஆனாய் போற்றி!
காலனைக் காலால் ஊன்றும் காசிவிஸ் வேசா போற்றி!

அப்பரைத் தாங்கும் ஆழி அருந்தவக் கல்லே போற்றி!
செப்பரும் சம்பந் தர்க்குச் சிவிகைதந் தாண்டாய் போற்றி!
ஒப்பிலாச் சுந்த ரர்க்காய் உயர்தூது நடந்தாய் போற்றி!
கைப்பிடிக் குள்அடங்கும் காசிவிஸ் வேசா போற்றி!

வேதமும் காண வொண்ணா விரிபொருள் ஆனாய் போற்றி!
கீதமே பாடும் அன்பர் கிளையெலாம் காப்பாய் போற்றி!
மாதவக் கங்கை தும்பை மதிஅர வணிந்தாய் போற்றி!
காதலால் கசிவார் உள்ளக் காசிவிஸ் வேசா போற்றி!

வெள்ள மார் கங்கை வேகம் விலக்கியே காத்தாய் போற்றி!
உள்ளமே கோவில் ஆக்கும் உயர்பரம் பொருளே போற்றி!
வள்ளலாய்ச் சுந்த ரர்க்கு வான்பொருள் கொடுப்பாய் போற்றி!
கள்ளநெஞ் சுணர மாட்டாக் காசிவிஸ் வேசா போற்றி!

பெண்ணொரு பாகம் பேணிப் பித்தனாய்த் திரிவாய் போற்றி!
மண் அடி முடியும் காண வைகையில் நடந்தாய் போற்றி!
தண்ணருள் பொழிய இன்பத் தமிழமு தளித்தாய் போற்றி!
கண்இமைக் குள் விளங்கும் காசிவிஸ் வேசா போற்றி!

மான் இடக் கரத்தில் தாங்கி மான்இடம் கொண்டாய் போற்றி!
மானிடக் கோலம் காட்டி மணிமொழி வரைந்தாய் போற்றி!
வான்இடம் கொண்ட தேவர் மனத்தினுள் மறைந்தாய் போற்றி!
கானிடை ஆடல் காட்டும் காசிவிஸ் வேசா போற்றி!

அண்டரும் முனிவர் தாமும் அறியொணா அறிவே போற்றி!
வண்டுலாம் கொன்றை சூடி வரந்தரும் வளமே போற்றி!
உண்டநஞ் சமுதாய் மாற்றும் உமையவள் பங்கா போற்றி!
கண்டமட் டிருண்ட மேனிக் காசிவிஸ் வேசா போற்றி!

பூணலா அரவம் சூடிப் புறம்புறம் திரிந்தாய் போற்றி!
ஊணலா ஊனை ஏற்கும் ஓட்டினைப் பெற்றாய் போற்றி!
பேணியே தொழுதால் வீட்டுப் பிள்ளையாய் வருவாய் போற்றி!
காணரும் சோதி லிங்கக் காசிவிஸ் வேசா போற்றி!

பற்றிலா ஞானச் செல்வர் பற்றிடும் பற்றே போற்றி!
செற்றவர் புரங்கள் மூன்றாய்த் திகழ்மலம் எரித்தாய் போற்றி!
கொற்றவன் வடிவ மேற்றுக் கூடலில் நடந்தாய் போற்றி!
கற்றவர் விழுங்கும் ஞானக் காசிவிஸ் வேசா போற்றி!

சொல்லிலே உலகம் காட்டித் தொண்டர்சீர் விரித்தாய் போற்றி!
நெல்லிலே மலையைக் காட்டி நிறைதமிழ் பெற்றாய் போற்றி!
இல்லக விளக்காய் வீட்டில் இன்பமே அளிப்பாய் போற்றி!
கல்லையும் கனியச் செய்யும் காசிவிஸ் வேசா போற்றி!

பொடி புனை புனித னாகிப் பூசுவெண் ணீற்றாய் போற்றி!
அடிமுடி காணா வண்ணம் அருணையில் ஒளிர்வாய் போற்றி!
வடிவுடைச் சூலம் தாங்கும் வயிரவக் கோலம் போற்றி!
கடியுலாம் சோலை சூழ்ந்த காசிவிஸ் வேசா போற்றி!

ஆதியும் அந்தம் தானும் அமைந்திடா அளவே போற்றி!
மாதுமுப் பத்தி ரண்டாய் வளர்த்திடும் அறமே போற்றி!
சோதியாய்ப் பன்னி ரண்டு தோற்றமும் கொண்டாய் போற்றி!
காதிலே ஓங்காரம்சொல் காசிவிஸ் வேசா போற்றி!

உருவிலே கூத்த னாகும் ஒருவனே போற்றி போற்றி!
அருவிலே அண்டம் தாங்கும் அகிலேசா போற்றி போற்றி!
அருவுரு லிங்க மாகும் அப்பனே போற்றி போற்றி!
கருவிலே திருவைச் சேர்க்கும் காசிவிஸ் வேசா போற்றி!

- *இயற்றியவர்* **சொ.சொ. மீ. சுந்தரம்**

# காசி விஸ்வேசர் போற்றி

சீர்வளர் காசியில் சிவமே போற்றி!
வார ணாசியில் வளர்வாய் போற்றி!
அகல்யா பாய்க்கருள் அப்பனே போற்றி!
புகல் அடைந் தோர்களைப் புரப்பாய் போற்றி!
கங்கையைத் தாங்குசெஞ் சடையாய் போற்றி!
மங்கைக் கிடமே வழங்கினாய் போற்றி!
அன்னையின் வடிவில் அமர்ந்தாய் போற்றி!
அன்னபூ ரணியாம் அருந்தவ போற்றி!
மாசிலார் துன்பம் மாற்றுவாய் போற்றி!
காசிக் கயிற்றால் களைபவ போற்றி!
பூசும் நீற்றின் பொலிவே போற்றி!
பேசும் ஐந் தெழுத்தின் பெருமையே போற்றி!
தீர்வரும் மனநோய் தீர்ப்பாய் போற்றி!
பார்வையால் ஆட்கொள்ளும் பைரவ போற்றி!
அகிலம் காக்கும் ஐயா போற்றி!
அகிலே சன் எனும் அண்ணலே போற்றி!
ஆயிரம் பேர்கள் அமைந்தாய் போற்றி!
தாய்விசா லாட்சி தண்ணருள் போற்றி!
திருமறை தந்த திருவருள் போற்றி!
திருமுறைக் குள்வளர் சிவமே போற்றி!
கட்டளை பற்பல கண்டாய் போற்றி!
லட்டுத் தேரை நயந்தாய் போற்றி!
ஈசான்ய திக்கில் இலங்குவாய் போற்றி!
காசிவிஸ் வேசர் கழலிணை போற்றி!
பொங்கிய கங்கைப் பொலிவே போற்றி!
எங்கும் தெரியும் இலிங்கமே போற்றி!
நம்பின வர்க்கருள் நம்பா போற்றி!
"சம்போ" செல்லத் தாங்குவாய் போற்றி!
மங்கலம் குமரர்க்கு வழங்கினாய் போற்றி!
கங்கைக் கரைமடம் கண்டனை போற்றி!
அட்சய வடமாய் அமைந்தாய் போற்றி!
பிச்சை ஏற்கும் பெருமான் போற்றி!
ஆதி லிங்கமாய் ஆனாய் போற்றி!
சோதி லிங்கமாம் சுடரே போற்றி!

பார்த்த னுக்கருள் பசுபதி போற்றி!
தீர்த்தச் செம்பில் திகழ்வாய் போற்றி!
தகரா காசத் தவமே போற்றி!
மகாம யான வாழ்வே போற்றி!
வீட்டில் திகழும் விளக்கே போற்றி!
காட்டில் ஆடும் கண்ணுதல் போற்றி!
மணமிலாப் பூவின் மணமே போற்றி!
தணல்எரி யேந்தும் தலைவா போற்றி!
பொன்னைக் காட்டிப் புரப்பாய் போற்றி!
தன்னைக் காட்டும் தத்துவ போற்றி!
மன்னுல கெல்லாம் வளைத்தாய் போற்றி!
அன்பர் பிடிக்குள் அடங்குவாய் போற்றி!
கட்டிப் பிடிக்கக் காட்டுவாய் போற்றி!
தொட்டுத் தழுவச் சுடர்பவ போற்றி!
காதில் மந்திரம் ஓதுவாய் போற்றி!
பாதாள ஈசனாய்ப் படர்ந்தாய் போற்றி!
அஞ்சு லிங்கமாய் ஆனாய் போற்றி!
மிஞ்சும் அமைதி விளக்கமே போற்றி!
மங்கல மீனாள் மணாள போற்றி!
தங்கவிசா லாட்சி தலைவா போற்றி!
நகரே சப்பெயர் நயந்தாய் போற்றி!
நகரத் தார் தவ நற்பயன் போற்றி!
ஆதி அனாதியும் ஆனாய் போற்றி!
ஓதும் மந்திரத் துட்பொருள் போற்றி!
அளக்க லாகா ஆற்றலே போற்றி!
விளக்கில் விளங்கும் விளக்கமே போற்றி!
பக்தர்க் கருளும் பரம்பர போற்றி!
முத்தி அளிக்கும் முதலே போற்றி!
ஞானியர் காணும் நல்லொளி போற்றி!
ஆனந்த வனத்தில் ஆடுவாய் போற்றி!
பூரண ஞானப் பொலிவே போற்றி!
காரணம் கடந்த கடவுள் போற்றி!
பதியில் சிறந்த பதியே போற்றி!
நதியில் சிறந்த நதியே போற்றி!
பயம் கெடுத் தாளும் பரனே போற்றி!
சுயம் பிர காசச் சோதி போற்றி!
அணைந்தவர்க் கின்பம் அளிப்பாய் போற்றி!
மணிகர் ணிகையில் வழங்குவாய் போற்றி!

தொடரும் பாசம் சுடுவாய் போற்றி!
அடைவோர் பிறவி அறுப்பாய் போற்றி!
வினையெலாம் மாற்றும் விஸ்வேச போற்றி!
மனையெலாம் சிவமாய் வந்தவ போற்றி!
தாயென மடியில் தாங்குவாய் போற்றி!
ஒய்வளித் தாளும் ஒருவனே போற்றி!
பாடும் பணிக்கே பணிப்பாய் போற்றி!
கோடி தீர்த்தம் கொண்டவ போற்றி!
மரண பயத்தை மாற்றுவாய் போற்றி!
திருவருள் புரியத் தேடுவாய் போற்றி!
எண்ணுவார் நெஞ்சில் இனிப்பாய் போற்றி!
எண்ணியபடியே வருவாய் போற்றி!
கரும வினைகள் களைவாய் போற்றி!
தரும வனத்தில் தங்குவாய் போற்றி!
ராக்கால பூசை நயந்தாய் போற்றி!
பூக்கோலம் காட்டிப் பொலிவிப்பாய் போற்றி!
கல்லா நெஞ்சில் நில்லாய் போற்றி!
எல்லாம் சிவமாய் இருந்தாய் போற்றி!
அயன்தலை மாலை அணிந்தாய் போற்றி!
பயன்தரும் ஆகமம் பயந்தாய் போற்றி!
மதியை வளர்க்கும் வள்ளால் போற்றி!
கதியென நின்ற கடவுள் போற்றி!
திரிவேணி சங்கமம் திகழ்வாய் போற்றி!
அருள்பொழி கயைப்பதி அமர்ந்தாய் போற்றி!
பருகா அமுதாம் பண்பே போற்றி!
கருவாய் உலகம் காப்பாய் போற்றி!
மூவர்க் கருளும் முதல்வா போற்றி!
தேவரும் காணாச் சிவமே போற்றி!
கண்டம் கறுத்த கனியே போற்றி!
துண்டி விநாயகர் துணையே போற்றி!
வந்த பிறப்பாம் வரவே போற்றி!
சிந்தும் இறப்பாம் செலவே போற்றி!
ஆல நீழல் அமர்ந்தாய் போற்றி!
காலனைக் காய்ந்த கண்அழல் போற்றி!
தேசு மிகுந்த திருவருள் போற்றி!
காசிவிஸ் வேசக் கடவுளே போற்றி!

- இயற்றியவர் **சொ.சொ. மீ. சுந்தரம்**

## காசி விஸ்வநாதருக்கு நகரத்தார்கள் 191 ஆண்டுகளாக அபிஷேகம் செய்துவரும் நேரங்கள்

| | | |
|---|---|---|
| காலை | 3.00 | மணி |
| பகல் | 12.00 | மணி |
| இரவு | 9.00 | மணி |




## காசியில் பார்க்க வேண்டிய முக்கியமான இடங்கள்

1. விசுவநாதர் ஆலயம், அன்னபூரணி ஆலயம், விசாலாட்சி ஆலயம்
2. துர்கா மந்திர்
3. சங்கட் மோட்ச அனுமார் கோவில்
4. காசி இந்துப் பல்கலைக்கழகம் – அங்கேயுள்ள விசுவநாதர் ஆலயம்
5. துளசி மானச மந்திர் – இராமாயணக் காட்சிகள் நிறைந்த கலைக்கூடம்
6. காசி மன்னர் அரண்மனை – அதன் அருகில் உள்ள வியாச காசி – வியாசர் பிரதிஷ்டை செய்த பெரிய சிவலிங்கம்
7. சாரநாத் – ஸ்தூபியும் கோவில்களும்
8. கங்கையில் உள்ள மணிகர்ணிகை, அரிச்சந்திரா கட்டங்கள்
9. கேதார ஈஸ்வரர் கோவில்
10. குமாரசாமி மடம்
11. கங்கையில் உள்ள மிதக்கும் பாலம்
12. கால பைரவர் திருக்கோவில் – இவரிடம் சொல்லிக் கொண்டு, காசிக் கயிறு கட்டிக்கொண்டு தான் ஊருக்குத் திரும்ப வேண்டும்.

# காசியம்பதியில் நீராடும் கங்கைத் துறைகள்

| | |
|---|---|
| •1. அசி | 33. திரிபுரசுந்தரி |
| 2. லோலார்கம் | 34. விசாலாட்சி |
| 3. துளசிதாஸ் | 35. ஜராசந்தேசுவரம் |
| 4. ஜானகி | 36. லலிதா |
| 5. பாரசுவநாதம் | 37. கங்காகேசவம் |
| 6. சிவாலயம் | 38. பிரம்மநாளம் |
| 7. நிரஞ்சனம் | 39. மகாசுமயானம் |
| 8. பிரமேந்திரம் | 40. சித்திவிநாயகம் |
| 9. அனுமந்தம் | •41. மணிகர்ணிகை |
| 10. அரிச்சந்திரம் | 42. தத்தாத்ரேயம் |
| 11. லல்லி | 43. சேந்தியம் |
| 12. சிந்தாமணி | 44. சங்கடாதேவி |
| 13. ராணி | 45. யமேசுவரம் |
| •14. கேதாரம் | 46. கங்காமகால் |
| 15. சௌகி | 47. அக்னீசுவரம் |
| 16. உருக்மாங்கதம் | 48. இராமா |
| 17. க்ஷேமேசுவரம் | 49. இலட்சுமண பாலா |
| 18. மானசரோவர் | 50. மங்களா கௌரி |
| 19. நாரதம் | •51. பஞ்சகங்கை |
| 20. அன்னபூரணா | 52. பிந்துமாதவம் |
| 21. பாண்டேயம் | 53. துர்க்கா |
| 22. சதுர்சஷ்டி | 54. பிரம்மா |
| 23. தண்டி | 55. சத்திரம் |
| 24. ராணாமகால் | 56. நாராயணன் |
| 25. முன்ஷி | 57. லால் |
| 26. அகல்யாபாய் | 58. கௌ |
| 27. சீதளா | 59. நாராயணன் |
| 28. பிரயாகை | 60. திருலோசனேசுவரம் |
| 29. தசாசுவமேதம் | 61. பிரகலாதம் |
| 30. அசுவம் | 62. ராஜ |
| 31. கிடிகீ | 63. கட்கவிநாயகம் |
| 32. மான்மந்திரம் | 64. வருணாசங்கமேசுவரம் |

• புள்ளியிட்டவை சிறப்புமிக்க நீராடு துறைகள், நடந்து செல்ல இயலாதவர்கள் படகிலேனும் சென்று இத் துறைகளிலும் நீராடுவது மரபு. (64ல் பலதுறைகள் இப்பொழுது இல்லை)

# காசித் திருப்புகழ்

தார ணிக்கதி பாவி யாய்வெகு
சூது மெத்திய மூட னாய்மன
சாத னைக்கள வாணி யாயுறு மதிமோக
தாப மிக்குள வீண னாய்பொரு
வேல்வி ழிச்சிய ராகு மாதர்கள்
தாமு யச்செயு மேது தேடிய நினைவாகிப்
பூர ணச்சிவ ஞான காவிய
மோது தற்புணர் வான நேயர்கள்
பூசு மெய்த்திரு நீறி டாஇரு வினையேனைப்
பூசி மெய்ப்பத மான சேவடி
காண வைத்தருள் ஞான மாகிய
போத கத்தினை யேயு மாறருள் புரிவாயே
வார ணத்தினை யேக ராவுமு
னேவ ளைத்திடு போது மேவிய
மாய வற்கித மாக வீறிய மருகோனே
வாழு முப்புர வீற தானது
நீறெ ழப்புகை யாக வேசெய்த
மாம திப்பிறை வேணி யாரருள் புதல்வோனே
கார ணக்குறி யான நீதிய
ரான வர்க்குமு னாகவேநெறி
காவி யச்சிவ நூலை யோதிய கதிர்வேலா
கான கக்குற மாதை மேவிய
ஞான சொற்கும ராப ராபர
காசி யிற்பிர தாப மாயுறை -பெருமாளே

☆ ☆ ☆ ☆ ☆

மங்கைக் கணவனும் வாழ்சிவ னாமயல்
பங்கப் படமிசை யேபனி போல்பதம்
வந்துட் பெருகிட வேவிதி யானவ னருள்மேவி

வண்டுத் தடிகைபொ லாகிய நாள்பல
பந்துப் பனைபழ மோடிள நீர்குட
மண்டிப் பலபல வாய்வினை கோலும வழியாலே

திங்கட் பதுசெல வேதலை கீழுற
வந்துப் புவிதனி லேமத லாயென
சிந்தைக் குழவியெ னாவனை தாதையு மருள்கூரச்
செம்பொற் றடமுலை பால்குடி நாள்பல
பண்புத் தவழ்நடை போய்வித மாய்பல
சிங்கிப் பெருவிழி யாரவ மாயதி லுழிவேனோ

அங்கைத் தரியென வேயொரு பாலக
னின்பக் கிருபைய தாயொரு தூண்மிசை
அம்பற் கொடுவரி யாயிரண் யாசுர னுடல்பீறி
அண்டர்க் கருள்பெரு மான்முதி ராவணி
சங்குத் திகிரிக ரோனரி நாரவ
ரங்கத் திருவணை மேல்துயில் நாரணன் மருகோனே

கங்கைச் சடைமுடி யோனிட மேவிய
தங்கப் பவளொளி பால்மதி போல்முக
கங்குற் றரிகுழ லாள்பர மேஸ்வரி யருள்பாலா
கந்துப் பரிமயில் வாகன மீதிரு
கொங்கைக் குறமக ளாசையொ டேமகிழ்
கங்கைப் பதிநதி காசியில் மேவிய பெருமாளே

☆ ☆ ☆ ☆ ☆

வேழ முண்ட விளாகனி யதுபோல
மேனி கொண்டு வியாபக மயலூறி
நாளு மிண்டர்கள் போல்மிக அயர்வாகி
நானு நைந்து விடாதருள் புரிவாயே
மாள அன்றம ணீசர்கள் கழுவேற
வாதில் வென்ற சிகாமணி மயில்வீரா
காள கண்ட னுமாபதி தருபாலா
காசி கங்கையில் மேவிய பெருமாளே

**- அருணகிரிநாதர்**

# நகரச்சத்திரங்களின் முகவரிகள்

| | STD | PHONE |
|---|---|---|
| **VARANASI**<br>SriKasi Nattukottai Nagarathar Satram<br>Godowlia, Varanasi - 2201002 (U.P.) | 0542 | 2402004 |
| **ALLAHABAD**<br>Nattukottai Nagara Satram,<br>149, Mori Daraganj,<br>Allahabad - 211006 (U.P.) | 0532 | 2501275 |
| **AYODHYA**<br>Nattukottai Nagara Satram,<br>Nattukot Sri Ram Mandir, Babu Bazaar,<br>Ayodhya (U.P.) | 05278 | 234059 |
| **GAYA**<br>Nattukottai Nagara Satram,<br>No. 171, Chand Chowra,<br>Gaya - 823 001 (Bihar) | 98350 | 93796 |
| **KOLKATTA**<br>Nagarathar House,<br>34, Ezra Street,<br>Kolkatta - 700 001 (W.B.) | 033 | 22350052 |
| **NASIK**<br>Nattukottai Nagara Satram,<br>Karthick Swamy Mandir,<br>Shani Chowk, Panchavati,<br>Nasik - 622 003. (Maharashtra) | 0253 | 2620878 |
| **CHENNAI**<br>Rangoon Nagara Viduthi,<br>88, Coral Merchant Street,<br>Mannady, Chennai - 600 001. | 044 | 25268155 |
| **KARAIKUDI** (Head Office)<br>Sri Kasi Nattukkottai Satram Managing Society,<br>No. 5, West Vadam Pokki Street,<br>(Near Nagara Sivan Kovil)<br>Karaikudi - 630 001. | 04565 | 220501 |

# காசியில் நகரத்தார்கள்
# செலுத்த வேண்டிய கட்டளைகள் விபரம்

1. பால்கட்டளை ரூ. 101/–
2. புஷ்ப கட்டளை ரூ. 51/–
3. பாதாள ஈஸ்வரர் அபிஷேகக் கட்டளை ரூ 11/–

மற்றும் நன்கொடைகள், பூஜைப்பொருள்கள் ஏற்றுக் கொள்ளப்படும்.

நித்ய கட்டளை ரூ. 1001/– தாங்கள் விரும்பும் தேதியில் தங்கள் பெயர், நட்சத்திரம் சொல்லி ஆண்டுக்கு ஒரு முறை அர்ச்சனை செய்து பிரசாதம் அனுப்பி வைக்கப்படும்.

அலகாபாத் ரயில்வே ஸ்டேஷன் to சத்திரம் 9km ஆட்டோ ரூ. 80/- to 90/-(சுமார்)
சத்திரம் to திரிவேணி சங்கமம் up & down நபர் ஒன்றுக்கு ரூ. 25/–

Boat நபர் ஒன்றுக்கு 20/–
சங்கல்பத்துக்கு ரூ. 5/–

- காசியில் ரயில்வே ஸ்டேஷன் to நகரச்சத்திரம் 3.5 k.m. ஆட்டோ கட்டணம் ரூ. 55/– (சுமார்)
- காசிச் சத்திரம் to கால பைரவர் கோவில் போக வர ஆட்டோ ரூ. 55/– (சுமார்) ரிக்ஷா ரூ. 12/–

விசுவநாதா! உன் சரிதக் கடலின் அமுத நீரை அறிவென்னும் சகடை மூலம் வாக்கென்னும் குடத்தில் நிரப்பிக் காவியக் கால்வாய்களில் இறைத்து, மனமாகிய வயலில் பக்திப் பயிர் வளர்க்கிறேன். இந்த ஆன்ம ஞானப் பயிரைப் பற்றி அச்சம் ஏற்பட இனி இடமேது?

**ஆதிசங்கரர்** (சிவானந்தலஹரி)

sree vinayaga 0452-2600300